உ

# திருச்செந்தில் கலம்பகம்



ஆசிரியர்
திருவாவடுதுறை ஆதீனம்
நெல்லை ஈசானமடத்தின் ஈசானதேசிகர் என்னும்
இலக்கணக்கொத்து
**அருட்டிரு சுவாமிநாத தேசிகர்**

உரையாசிரியர்
குன்றக்குடி ஆதீனப்புலவர், தமிழாகரர்,
சைவத்தமிழ் மணி, சைவத்தமிழறிஞர், சித்தாந்தச் செல்வர்,
**வித்துவான். க. கதிரேசன். எம். ஏ; பிஎட்,**
பூவாளூர். 621 712. பேசி : 09865193754

**திருச்செந்திற் கலம்பகம் தோரணவாயில்.**

இக்கலம்பகத்து ஆசிரியரைத் தமிழ்உலகம்" இலக்கணக்கொத்து சுவாமிநாததேசிகர் " என்றே கூறிமகிழும். அத்தகு சிறப்புடையன இவரெழுதிய அந்நூலும் அதற்கு இவரே எழுதிய உரைச்சிறப்பும் ஆகும்.

பாண்டியநாட்டில் பிறந்த இவர் சோழநாட்டுத் திருவாவடுதுறைத் திருமடத்தில் ஞானாசிரியராக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரிடம் தீக்கைபெற்றுத் துறவியாகித் தம்பிரான் ஆனார்.

இளமையில்திருநெல்வேலி " மயிலேறும் பெருமாள் " என்றபெயருடைய புலமைநலத்தாரிடம், இலக்கிய இலக்கணங்களில் நன்கு பட்டைதீட்டப்பெற்ற பருவைரமானார். பின்னர் நெல்லை செப்பறையில் வாழ்ந்த " கனகசபாபதி சிவாசாரியாரிடம் " வடமொழி இலக்கிய இலக்கணங்களைக் கற்றுத்தேர்ந்தார். இவற்றின் விளைவே இவரது இக்கலம்பகமும், இலக்கணக்கொத்தும், தசகாரியம் என்ற சாத்திரநூலும். " இலக்கண விளக்கம் " நூல் எழுதிய " வைத்தியநாத நாவலர் " இவருடனிருந்து நூலாராய்ச்சி செய்தது குறிப்பிடத்தக்கதாகும். நன்னூல் விருத்தியுரை செய்த " சங்கரநமச்சிவாயர் " இத்தேசிகரின் மாணவர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

இவரது சிறப்புகளை உணர்ந்த இவரின் ஆசிரியர் மயிலேறும் பெருமாளின் வேண்டுகோளினை ஏற்று, ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் அவர்கள், இவருக்குத் தீக்கைவழங்கி, **" ஈசானதேசிகர் "** என்ற அபிடேகச் சிறப்புப்பெயரிட்டு, இவரைத் திருநெல்வேலியிலிருந்த தமது கிளைமடத்தில் இருக்கச்செய்தார். அதனால் **" அக்கிளைத்திருமடத்திற்கு ஈசான மடம் "** என்றபெயர் வழங்குவதாயிற்று.

இலக்கணம் கற்பித்தல், இலக்கண நூல் இயற்றுதல், தசகாரியம் என்ற சமயநூல் இயற்றுதல் என்று முப்பணிகளிலும் சிறந்து விளங்கிய இவர் திருச்செந்தூர்ப் பெருமானிடம் கொண்டிருந்த பேரீடுபாட்டினால் சிறப்புநாட்கள்தோறும் திருச்செந்தூர் சென்று பெருமானை வணங்கும் வழக்கம் உடையவரானார். இப்பத்தி மேலீட்டல் மலர்ந்ததே இச்செந்தில்கலம்பகம். இக்கலம்பகத்தின் செய்யுட்களில் எண்கள் 2, 3, 4, 7, 11, 14, 20, 22, 35, 36, 73, 74, 78, 84, 87, 88 க்கு உரியவற்றை அருள்தரு செந்திலாண்டவன் பள்ளியறைக்கு எழுந்தருளும்போது திருமுன் ஓதுவாமூர்த்திகள் பாடிப்போற்றுவது வழக்கம் என்கிறார் இந்நூலின் குறிப்புரை ஆசிரியர் திரு. மு. ரா. அருணாசலக் கவிராயர் அவர்கள்.

1911 ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற இந்நூலில் அமைந்த செய்யுள்கள் அனைத்தும் சந்திபிரிக்கப் பெறாமலும், படிப்பவர் அடிதொடக்கம், மடக்குச்சீர் ஆகியவற்றைப் பார்த்த அளவிலேயே தெரிந்துகொள்ள வாய்ப்பின்றியும் அச்சிடப்பெற்றிருந்ததுடன், அளவான குறிப்புரையுடன் இருந்தன. இதில், இன்றுள்ளார் எளிதில் புரிந்துகொள்ளும் வண்ணம் சந்திபிரித்தும், அடி, மடக்கடி ஆகியவற்றைப் பார்த்த அளவிலேயே கண்டுகொள்ளும் வண்ணம் அமைத்தும், இன்றைய நிலைக்கேற்பக் குறிப்புரைகளைக் கூட்டியும், பொழிப்புரையுடன், முக்கியமான அணிசுட்டுதல் என்று அமைத்துக்கொண்டும் இந்நூலினை இங்குத் தந்துள்ளேன்.

இவர்களின் புலமைநலம், இலக்கணக்கூரறிவு, கற்பனைவளம் முதலியவற்றை இந்நூலின் செய்யுள்தோறும் சுவைத்து இன்புறலாம். எடுத்துக்காட்டாக இந்நூலின் **" நாணளினந் தளையவிழ்ந்த " என்று தொடங்கும் செய்யுள் எண் 89** இல் சுவைத்துமகிழ்க.

அன்பர்கள் தோய்ந்து படித்து அருள்தரு செந்திலாண்டவன் திருவருள் பெற்றுச்சிறக்க அன்புடன் வேண்டுகிறேன்.

கலம்பக ஆசிரியராகிய அருட்டிரு சுவாமிநாத தேசிகரின் இவ்வரலாற்றுக்குறிப்பு, இலக்கணக்கொத்து நூலின் முகவுரையில் யாழ்ப்பாணத்துநல்லூர் ஆறுமுகநாவலர் அவர்கள் எழுதியதன் சுருக்கக் குறிப்பு.

குருவருளுக்கும் திருவருளுக்கும் வணக்கம்.

அன்புள்ள,

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப் புலவர், தமிழாகரர்,
சைவத்தமிழ் மணி, சைவத்தமிழ் அறிஞர், சித்தாந்தச் செல்வர்
**வித்துவான். க. கதிரேசன். எம். ஏ; பி.எட்.**
பூவாளூர். 621 712. பேசி. 09865193754.

**திருச்செந்தில் கலம்பகப் பாயிரம்.**

( ஆசிரியர் பெயர் தெரியவில்லை )

மதிக்கும் பரிதிக் கடவுளுக்கும் வழங்கும் விழியான் அருள்மதலைக்(கு)
இதக்கும்(பு) அடக்கும் கலம்பகப்பா இசைக்கும் தமிழால் இனி(து)இசைத்தான்
புதுக்கும் தமிழ்த்தென் கடல்கடக்கப் பொருந்தும் தோணி போல்இயல்செய்
துதிக்கும் தமிழ்ஆர் துறைசைநகர்ச் சுவாமி நாத தேசிகனே.

**குறிப்புரை** : மதிக்கும் பரிதிக்கடவுளுக்கும்= நிலவு, சூரியன் ஆகியகடவுளர்க்கும். விழிவழங்கும்= முறையே தனது இடது வலது கண்களாகக் கொண்ட. மதலை= மகன். இதம்= நன்மை. கும்பு= குவியல். இசைக்கும்= புகழப்பெறும். இசைத்தான்= கூறினான். புதுக்கும்= புதிய. புதுக்கும் தோணி. இயல்செய்= இயற்றமிழ் நூல்செய்த. துதிக்கும்= அனைவரும் வணங்கும். துறைசை= திருவாவடுதுறை.

**பொழிப்புரை** : இனிய தமிழ்க்கடலினைக் கடக்கப் பொருந்திய புதியதோணிம்போல, அனைவரும் வணங்கும் தமிழில் வல்லமைபொருந்திய திருவாவடுதுறைநகர ஆதீனத்துச் சுவாமிநாத தேசிகர்; நிலவு சூரியன் ஆகிய கடவுளர்களை முறையே தமது இடது வலது கண்களாக அமைத்துக் கொண்ட சிவபிரான் தம்மகனாக அருளிய முருகனுக்கு, நன்மைபொருந்திய அறிவுக்குவியலைத் தன்னகத்தே அடக்கிய கலம்பக நூலினைப் புகழப்பெறும் தமிழில் இயற்றமிழ் நூலாகப் படைத்தார்.

## திருச்செந்தில் கலம்பகம்

### விநாயக வணக்கம்

நிலம்பக வீழ்சடை நீ(று)அணி வான்மைந்தன் நீ(டு)அயிலோன்
கலம்பகம் செந்தமிழ்ப் பாமாலை யால்செந்திற் கண்மருவும்
சிலம்பக மெல்லடி வல்லபை கேள்வனைத் திங்கள்வெண்கோட்(டு)
இலம்பக யானை முகத்தானை வாழ்த்தி இயம்புவனே.

**குறிப்புரை** : பக= பிளக்க. சிலம்பு= பாதசரம்.( ஒருவகைக்கால் அணி ). கேள்வன்= கணவன். இலம்பகம்= நெற்றிப்பட்டம். அகம் வாழ்த்தி இயம்புவன். அகம்= மனம்.

**பொழிப்புரை** : நிலம்பிளக்கும் நீண்ட சடையுடையவனும் வெண்ணீறு அணிந்தவனும் ஆகிய சிவபிரானுக்கு மகனாகிய நீண்ட வேல்ஏந்திய செந்திலானின் கலம்பகம் ஆகிய பாமாலையின்பொருட்டுச் செந்திலில் எழுந்தருளியுள்ள பாதசரம் அணிந்த மென்மையான வல்லபையின் கணவனான மூன்றாம்பிறை போல் வெண்மையான கோட்டினையும் நெற்றிப்பட்டமும் உடைய யானைமுகத்து விநாயகனை மனதார வாழ்த்திக்கூறுவேன்.

### நூல்

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

**நாலடித்தரவு** - 2

சொல்வாய்மை தரும்கடவுள் சுருதிகரு தியபொருளைப்
பல்சான்ற பெருங்கேள்விப் பனிமலய முனிவினவ
அம்புயனும் அறியாத அறம்முதலாம் தமிழ்மூன்றும்
சம்புவும்அன்(று) உடனுணரத் தருவோய்நீ முருகோனே.
கண்சுருங்க விரித்தபசுங் கலவமயில் எனத்திருமுன்
மண்சுருங்க விரித்தகுண மணிஆழி எழுபரித்தேர்
அந்தினக ரனைத்தடுக்கும் அணிமணிமா ளிகைப்புரிசைச்

செந்திநகர்ச் சினகரத்துத் திருத்தகவீற் றிருந்தனையால்.

**ஈரடித்தாழிசை- 6**

வானாகி உயிராகி உணர்வாகி உணர்(வு)உதவும்
கோனாகி வினையளவும் குணத்தளவும் தனக்(கு)அளவாய்
விரவாதி அந்தம்இலா வெளியாகித் தெளியாது
பரவாதி யரும்உலவாப் பழமறையும் தாம்அறைய
வாக்கும்மன மும்கடந்து மண்ணொடுவிண் ணிடத்(து)இயற்றும்
போக்குவர(வு) ஒழிந்துவிழிப் புலத்(து)உருவும் அருவமுமாய்
வேதாந்தம் சித்தாந்தம் விளங்குகலாந் தம்தெளிந்த
போதாந்த நாதாந்தப் புறத்தினும்அப் புறம்போகி
உணர்ந்தாரும் உணராரும் உணராமை உயிர்க்(கு)உயிராய்ப்
புணர்ந்தாலும் மாறாது புலன்நலமும் கலவாது
நின்றதனிப் பரம்பொருளாம் நினக்(கு)ஒருபேர் இலையெனினும்
இன்றுகுகன் எனப்பெறுவ(து) இளையோய்நின் விளையாட்டே

**ஓரடி அராகம்- 4.**

அருமறை முறையிட அறைகழல் பறையிட அடியர்உள் நினைவ(து) உன்அடி
ஒருமையின் இருமையும் உதவிய மதியென ஒளியொடு குளிர்வ(து) உன்முகம்
வருமுலை வனிதையர் இருவரும் மயில்இனம் மழையென விழைவது உன்எழில்
பெரு(கு)அலை கெழுகலி கடலினும் எழுமடி பெருகுவ(து) நின்அருள்.

**பெயர்த்தும் ஈரடித்தாழிசை - 6**

தாய்என்றும் தந்தைஎன்றும் சகம்ஈன்று தரும்உனக்குச்
சேய்என்று பின்னும்ஒரு திருநாமம் வருமாறுஎன் ?
முந்(து)இல்என்றே அடியர்உள முளரிதொறும் இருந்தாய்க்குச்
செந்தில்என்றே உரைக்கும்ஒரு திருப்பதியும் விருப்(பு)உளதே !
அயில்ஏற்று வரும்காலம் அல்லால்நீ கொல்லாயோ
மயில்ஏற்றம் ஏறுஉனக்கு மற்(று)ஏற்றம் பெற்றிலையோ ?
ஓராறு பனிமதியி னொடுபவள வரையின்நிரைத்(து)
ஈராறு தினகரரும் இடைஇடையே உதித்தாங்குக்
கருணைபொழி திருமுகமும் கணமணிக்குண் டலநிரையும்
திருநெடுந்தோள் களும்கமலச் சேவடியும் தூவடிவும்
பாடாது நினையாது பரவாத எனக்குவினை
கூடாத தொண்டரொடும் கூட்டியும்நீ காட்டினையால்.

**நாற்சீரடி அம்போதரங்கம்- 2**

பிறந்ததும் இறந்ததும் பெரும நின்புகழ்
மறந்ததும் அல்லது வணங்கி லேன்நினைக்
காமமும் வெகுளியும் களிம யக்கமும்
தாம்இடை கலந்(து)எனைத் தலைம யக்கலால்

**நாற்சீரடி அம்போதரங்கம்- 4**

உண்பதும் உடுப்பதும் உவந்து தேடினேன்
கண்படை கனவினில் கலங்கி வாடினேன்
உய்திறம் இதுஎன உணர்வு போயினேன்
செய்திறம் இதுஎனும் தெரிவில் பேயினேன்.

**முச்சீரடி அம்போதரங்கம்- 4**

எவ்வா(று) எனைஉய் யக்கொள்வாய்
எழுதா மறையின் திறத்துளாய்
செவ்வான் அனையான் திருப்பிள்ளாய்
தெரியா(து) இனிஉன் செயல்விள்ளாய்.

**இருசீரடி அம்போதரங்கம்- 8**

மெய்யுநீஇ பொய்யுநீஇ விண்ணுநீஇ மண்ணுநீஇ
ஐயைநீஇ செய்யைநீஇ ஆதிநீஇ சோதிநீஇ.

**தனிச்சொல்.**

எனவாங்கு.

**ஆறடி நேரிசைஆசிரியப்பா - சுரிதகம்**

நீஅல(து) இல்லை யாவையும் உலகம்
மற்றவற்(று) இடையான் அவத்(து)உடல் பொறையொடு
கறங்(கு)எனத் திரியாது பிறங்குசுர(வு) எறியும்
நந்(து)ஊர் கடல்துறைச் செந்தூர் பரவுவன்
காமரு பூந்தொடைக் கடம்பநின்
தாமரை மலரடி தருகமா எனவே.

**நாலடித் தரவு - குறிப்புரை :** வாய்மை= வலிமை. கடவுள்= தெய்வத்தன்மை. பல்சான்ற= பலவகையாலும் நிரம்பிய. பனி மலயமுனிவன்= இனிய பொதிகைமலைஅகத்தியர். அம்புயன்=தாமரையில் இருக்கும் நான்முகன். தமிழ்மூன்று= அறம் பொருள் இன்பம். சம்பு= சிவபிரான். கண்சுருங்க= கண்கூச. பசுங்கலவம்= பசிய தோகை. மண்சுருங்க= நிலப்பகுதி குறையுமாறு. ஆழி= கடல். எழுபரித்தேர்= ஏழு வண்ணங்களாகிய குதிரைகள் பூட்டிய தேர். அம் தினகரன்= அழகிய சூரியன். புரிசை= மதில். சினகரம்= திருக்கோயில். திருத்தக= விரும்பும் தகுதிக்கேற்ப. **பொழிப்புரை :** சொல்லுக்கு வலிமைதரும் தெய்வத்தன்மையுடைய மறைகூறும் பொருளை, பலவகையாலும் நிரம்பிய பெரிய கேள்விச்செல்வ முடைய இனிய அகத்திய முனிவர் கேட்க, அவருக்கு நான்முகனும் அறியாத அறம் பொருள் இன்பம் ஆகிய முத்தமிழையும் கூடஇருந்து சிவபிரானும் அந்நாளில் கேட்கத் தந்த முருகனே ! காண்பவர் கண்கூசும் ஒளியுடைய பசிய தோகை மயில்போல விளங்குவதும், நிலப்பகுதி குறையுமாறு விரிந்துள்ளதும் ஆகிய அழகிய கடலில், ஏழுவண்ணங்களாகிய குதிரைகள் பூட்டிய தேரில் வரும் அழகிய காலை ஞாயிற்றைத் தடுக்கும் மதில்சூழ்ந்த அழகிய சிறந்த மாளிகைகளுடைய திருச்செந்தூர்த் திருக்கோயிலில் அனைவரும் விரும்பும்தகுதிக்கேற்ப நீ எழுந்தருளியுள்ளாய்.

**ஈரடித்தாழிசை- 6 . குறிப்புரை :** கோன்= தலைவன். விரவு= கலந்து நிற்கின்ற. ஆதி அந்தம்= தோற்றமும் முடிவும். பரவாதி= அன்னிய சமயவாதிகள். உலவா= அழிவில்லாத. பரமறை= விரிந்த வேதம். அறைய= கூற. இயற்றும்= நிகழ்த்தும். விழிப்புலம்= காணுதல். கலாந்தம்= சாத்திரமுடிவு. போதாந்தம்= ஞான எல்லை. நாதாந்தம்= நாதத்தின் எல்லை. புறத்தினும் அப்புறம்போகி= அப்பாலுக்கு அப்பாலாய் நின்று. புணர்ந்தாலும்= கலந்திருந்தாலும். நலம்= பயன். இன்று= இந்நாளில். **பொழிப்புரை :** உடம்பாக உயிராக உணர்வாக உணர்வை உதவும் தலைவனாக விளங்கி, அவரவர் வினையின்தன்மை குணத்தின்தன்மை ஆகியவற்றைத் தான்அருளுதற்குரிய அளவாகக்கொண்டு கலந்துநின்று, இரவுமுதலான எல்லையற்ற வெளியாகி, அன்னியசமயத்தினரும் அழிவில்லாத விரிந்தவேதமும் உன்னைப்பற்றித் தெளிவின்றிக்கூற, சொல்லும் மனமும்கடந்து, இந்நிலத்திற்கும் விண்ணிற்கும் வருதலும் போதலும் ஆகிய பிறப்பு இறப்பு ஆகியன இன்றி, கண்களால் காணும் உருவமும் காணவியலாத அருவமும் ஆகவிளங்கி, வேதாந்தம் சித்தாந்தம், சாத்திர முடிவு, தெளிவான ஞானமுடிவு, நாதத்தின் முடிவு ஆகியவற்றின் அப்பாலுக்கு அப்பாலாய்ப் போய், உன்னை உணர்ந்தார் உணராதார் ஆகியோர்களால் உணரப்படாமல், உயிர்க்கு உயிராய் அவ்வுயிருடன் கலந்திருந்தாலும் அவ்வுயிர்களின் புலன்களின் பயன்களாகிய பார்த்தல் கேட்டல் முதலியவற்றில் கலவாமல் நிற்கின்ற ஒப்பற்ற பரம்பொருளாகிய உனக்கு எந்தஒருபெயரும் இல்லை என்றாலும், இந்நாளில் உன்னைக்குகன்என்று பெயரிட்டுரைப்பது இளையவனே ! உன்விளையாடலேயாகும்.

**ஓரடி அராகம்- 4 . குறிப்புரை :** முறையிட= தம்குறைகூறி வேண்ட. பறையிட= முழங்க. உள்= உள்ளம். ஒருமை= ஒருபார்வை. இருமை= இம்மை மறுமை இன்பம். வனிதையர்= வள்ளி தெய்வானை. மயிலின மழை= மயில்கள்நோக்கும் மழைமேகம். எழில்= எழுச்சிதரும் அழகு. பெருகு அலைகெழு கலி கடல்= மிக்க அலைமுழங்கும் கடல். எழுமடி= ஏழுமடங்கு. உருகு= மனமிரங்கும். **பொழிப்புரை :** அரிய மறைகள் தம்குறைகூறி வேண்ட, அடியவர் தமது உள்ளத்தில் நினைப்பது ஒலிக்கின்ற வீரக்கழல் முழங்க உள்ள உன்திருவடிகளையே. ஒருபார்வையிலேயே இம்மைமறுமை ஆகிய இன்பங்களை அருளும் குளிர்ந்த நிலவாக ஒளிர்வது உன்திருமுகம். இளம்கொங்கைகளுடைய வள்ளி தெய்வானை ஆகிய இருவரும் மயிலினம் ஆவலுடன் நோக்கும் மேகமாக எண்ணி விரும்புவது உனது எழுச்சிதரும் அழகு. மிக்க அலைமுழங்கும் கடலினைவிட ஏழுமடங்கு எம்பால் மனம் இரங்குவது உன்னருள்.

**பெயர்த்தும் ஈரடித்தாழிசை - 6. குறிப்புரை :** சகம்= உலகம். சேய்= மகன். முந்து இல்= முதன்மையான இல்லம். உளமுளரி= உள்ளத்தாமரை. இருந்தாய்= இருப்பவன். அயில்= வேல்.மயில்ஏற்றம் ஏறு உனக்கு= மயில் ஊர்ந்துவரும் உனக்கு. மற்று ஏற்றம்= வேறு உயர்வு. பவளவரை= பவளமலை. நிரை= வரிசை. ஈறாறு தினகரர்= பன்னிரு சூரியர். கணமணி= பெரியஅழகிய. தூ= தூய. வினைகூடாத= இருவினை சேராத. **பொழிப்புரை :** தாயாகவும் தந்தையாகவும் இருந்து உலகைஈன்ற உனக்குச் சேய் - மகன் என்ற திருப்பெயர் வந்ததெப்படி ? முதன்மையான இல்லமாகஅடியவரின் உள்ளத்தாமரையைக் கொண்டுள்ள உனக்குத் திருச்செந்தூர் என்றுசொல்லும் திருப்பதியின்மேலும் விருப்பம் உள்ளதே ! வேலேந்தும் பொழுது தவிரப் பிறநேரங்களில் நீ யாரையும் கொல்லாயோ ? மயிலை உயர்வானதாக ஏறிவரும் நீ வேறுஉயர்வு ஏதும் பெறவில்லையோ ? உன்னைப் பாடாத நினையாத வணங்காத என்னை இருவினை சேராத அடியவருடன் கூட்டிவைத்து ; ஒப்பற்ற ஆறுகுளிர்ந்த நிலவுகளிடையே பவளமலைகள் போல் வரிசையாகப் பன்னிருசூரியர்கள் இடையிடையே உதித்தாற்போலக் கருணைபொழி ஆறுதிருமுகங்களும், பெரிய அழகிய குண்டலங்களின் வரிசையும், திருநெடுந்தோள்களும், தாமரைபோன்ற திருவடிகளும் தூயவடிவமும் எனக்குக்காட்டினாய்.

**நாற்சீரடி அம்போதரங்கம்- 2. குறிப்புரை :** பிறந்ததும்= தானே தோன்றியதும் இறந்ததும்= எல்லைகடந்து விளங்குவதும். களிமயக்கம்= செருக்கினாலான மயக்கம். **பொழிப்புரை :** நின்புகழ் தானே தோன்றியதும் எல்லையற்றதுமாகும். காமம் சினம் செருக்கினாலான மயக்கம் ஆகியனகலந்து என்னை மயக்குவதால் உன்னைநான் வணங்காதது மட்டுமன்றி மறந்தும்விட்டேன்.

**நாற்சீரடி அம்போதரங்கம்- 4. குறிப்புரை :** கண்படை= உறக்கம். உய்திறம்= ஈடேற்றம் பெறும்வகை. தெரிவு= அறிவு. **பொழிப்புரை :** உண்பது உடுப்பது ஆகியவற்றையே விருப்புடன் தேடினேன். இதனால் உறக்கத்துக் கனவிலும் மனம்கலங்கி வாடினேன். செயற்படவேண்டிய வகைஇது என்ற அறிவு இல்லாத பேய்போன்ற நான், ஈடேற்றம் பெறும்வகை இன்னது என்ற நல்லுணர்வையும் இழந்தேன்.

**முச்சீரடி அம்போதரங்கம்- 4. குறிப்புரை :** உய்யக்கொள்வாய்= ஈடேற்றம் அருள்வாய். செவ்வான் அனையான்= செம்மேகம்போல் செக்கச்சிவந்த சிவபிரான். இனி உன் செயல் தெரியாது. விள்ளாய்= கூறியருள்க. **பொழிப்புரை :** வேதத்தின் போற்றுதலுடன் உள்ளவனே ! செக்கச்சிவந்த மேகம்போன்ற சிவபிரான் அருளிய தெய்விகப்பிள்ளையே ! என்னை எவ்வகையில் ஈடேற்றுவாய் ? உன்அருட்செயலை நான் அறியேன். கூறியருள்க.

**இருசீரடி அம்போதரங்கம்- 8. குறிப்புரை :** மெய்= நிலைத்தன. பொய்= நிலையாதன. ஐ= கடவுள். செய்யை= செம்மையானவன். **பொழிப்புரை :** நிலைத்தன, நிலையாதன, விண், மண், கடவுள், செம்மைத்தன்மை, ஆதி, சோதி ஆகிய அனைத்தும் நீ.

**தனிச்சொல்-**

எனவாங்கு

**ஆறடி நேரிசைஆசிரியப்பா- சுரிதகம். குறிப்புரை :** உலகம் யாவையும் நீஅலது இல்லை. அவம்= வீண். கறங்கு= காற்றாடி. சுறவு= சுறாமீன். நந்து= சங்கு. தருகமா= தருக. ( மா- அசைச்சொல் ) பரவுவன்= தியானிக்கின்றேன் **பொழிப்புரை :** உலகப்பொருள் அனைத்திலும் உன்னைத்தவிர வேறில்லை. நான் உலகப்பொருள்களிடையே பயனின்றி உடலினைச் சுமந்து காற்றாடிபோல் திரியாமல் நின்நினைவில் நிலைத்துவாழ, விளங்கும் சுறாமீன்கள் துள்ளுவதும் சங்குகள் ஊர்வதுமாகிய கடலின் கரையிலுள்ள திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள விரும்பத்தக்க கடம்பமலர்மாலை அணிந்தவனே ! உனது தாமரைமலர் போன்ற திருவடிகளைத் தந்தருள்க என்று உன்னைத் தியானிக்கின்றேன். ( 1 )

**வெண்பா.**

எனதே குகன்செந்தில் ஏத்துதொழில் அன்னோன்
தனதே எனைஆளும் தன்மை - வினவின்
மறத்திமணாள் அன்புமுதல் வாழ்வையெலாம் நெஞ்சே
குறத்திமணா ளன்புகழே கொள்.

**குறிப்புரை :** வினவின்= கேட்டால். ஏத்து= போற்றும். மண் ஆள்அன்புமுதல் வாழ்வை எலாம் மறத்தி. ஆள்அன்பு= ஆளும்பற்று.( மண்ணாள் என்பது மணாள் என்று ணகரம் கெட்டது செய்யுள் விகாரம் )

**பொழிப்புரை** : நெஞ்சமே ! நீகேட்பாயானால் செந்தில்குகனைப் போற்றும் தொழில் என்னுடையது. என்னை ஆளும்திறம் அவனுடையது. எனவே மண்ணை ஆளும் அரசவாழ்வு முதலிய அனைத்தையும் மறந்துவிடு. குறத்தியாகிய வள்ளிநாச்சியார்க்குக் கணவனாகிய முருகன் புகழையே மனத்திற்கொள். ( 2 )

**கலித்துறை.**

கொள்ளார் பவப்பிணி கூற்றுக்(கு)அஞ் சார்அன்பர் கூட்டம்அல்லால்
நள்ளார் பிணியின் நலிவு படார்தெய்வம் நாளும்மற்றொன்(று)
உள்ளார் முருகன்செந் தூர்பிரி யாதவன் ஒண்கமலக்
கள்ஆர் விரைமலர்த் தண்டையந் தாள்தொழக் கற்றவரே.

**குறிப்புரை** : பவப்பிணி= பிறவிநோய். நள்ளார்= நட்புக்கொள்ளமாட்டார். நாளும் பிணியின் நலிவுபடார். தெய்வம் மற்றொன்று உள்ளார்= பிறிதொரு தெய்வத்தை நினையார். கள்ஆர்= தென்பொருந்திய. விரை= நறுமணம்.

**பொழிப்புரை** : திருச்செந்தூரினைப் பிரியாத முருகனின், ஒளியுடன் தேனோடு நறுமணமும் கொண்ட தாமரைமலர்போன்ற தண்டையணிந்த திருவடிகளைத் தொழக்கற்றவர், பிறவிப்பிணி படார், யமனுக்கு அஞ்சார், அடியவர்கூட்டமல்லால் பிறருடன் நட்புகொள்ளார், நாடோறும் நோய்த்துன்பம் அனுபவியார், முருகனைத்தவிர பிறிதொரு தெய்வத்தை நினைக்கவுமாட்டார்.

**ஆசிரியவிருத்தம்.**

கற்றாலும் நீடூழி கழித்தாலும் கழியாத கரையில் வாழ்வு
பெற்றாலும் முருகன்அடிக்(கு) அன்புபெறா தவர்உலகில் பிறவி தீரார்
இற்றாலும் கலிநலிய இரந்தாலும் பேதையராய் எழுத்(து)ஆ(று) உள்ளத்(து)
அற்றாலும் அவனிருக்கும் செந்தில்என்றார் முந்(து)இல்என்றும் அடைவர் தாமே.

**குறிப்புரை** : நீடூழி கழித்தாலும்= நீண்ட ஊழிக்காலம் வாழ்ந்தாலும். கழியாத= அனுபவித்தும் குறையாத. கரையில்= எல்லையற்ற. இற்றாலும்= கெட்டாலும். கலி= வறுமை. இரந்தாலும்= பிறரிடம் யாசித்தாலும். பேதையராய்= அறிவற்றவராய். உள்ளத்து அற்றாலும்= மனத்தில் நினையாவிட்டாலும். செந்தில் என்றார்= செந்தூர் என்றவர். முந்து இல்= முதன்மையான வீடு - வீடுபேறு.

**பொழிப்புரை** : முருகப்பெருமான் திருவடியிடத்து அன்புசெலுத்தாதவர்; நிரம்பக் கற்றாலும், நீண்ட ஊழிக்காலம் வாழ்ந்தாலும், அனுபவித்தும் குறையாத செல்வவாழ்வு பெற்றாலும் இவ்வுலகில் பிறந்தே தீருவர். கெட்டாலும், வறுமைதுன்புறுத்தப் பிறரிடம் யாசித்தாலும், அறிவற்றவராக ஆறெழுத்தாகிய சரவணபவ என்பதை மனத்தில் நினைக்காவிட்டாலும் ஒருவர் முருகனிருக்கும் செந்தில் என்பாராயின் அவர் முதன்மையான வீடாகிய வீடுபேற்றைத் தாமே அடைவர்.

**ஆசிரியப்பா.**

தாமரை பயின்ற நான்முகக் கடவுள்
எழுதா மறைப்பொருள் பழுதாங்(கு) உரைப்ப
வீங்குமணிக் கடகம் தாங்குதிணி தடக்கை
முன்வருத் தியவா(று) இன்னமும் வருத்த
விரும்பிய தாலெனத் திரும்பிட நஞ்(சு)ஏய்
பாஇருள் பருகும் பல்கதிர்க் குழவி
ஞாயிறு சுற(வு)எறி நாள்முரி திரைமுகட்டு
எழுவது போல மழைதழை கலாபச்
செறிமயிர்ச் சிறையார் பொறிமயில் புறத்துச்
சேயொளி மேனி திகழாங்(கு) எழுந்தனை
தெய்வவான் கரிணியும் மொய்வரை அரிணியும்
தூஅலங்(கு அயிலும் சேவலங் கொடியும்
ஆறு முகமும் நீறணி புயங்களும்
பண்டைய மறைபுகழ் தண்டையந் தாள்களும்
கந்தநின் நாமமும் செந்திலம் பதியும்

வணங்கவும் நினைக்கவும் வாழ்த்தவும்
இணங்களில் பரவினேன் எனைவிதித் ததற்கே.

**குறிப்புரை** : எழுதாமறை= வேதத்து ஓங்காரம். பழுதாங்கு= தவறாக. வீங்கு= பருத்த. திணிதடக்கை= வலிமையான நீண்டகை. முன்வருத்தியவாறு= முன்பு குட்டியதுபோல. திரும்பிட= மீண்டும்வர. ஏய்= ஒத்த பா இருள்= பரவிய இருள். நாள்குழவி ஞாயிறு= காலை இளஞாயிறு. முரிதிரை முகட்டு= வளைந்த அலையின் உச்சி. மழைதழை= குளிர்ச்சி தழைத்த. கலாபம்= தோகை.. சிறை= சிறகு. பொறி= புள்ளி. சேயொளி= சிவந்தஒளி. கரிணி= தெய்வயானையம்மை. மொய்வரை= பெருமைபொருந்திய மலை. அரிணி= மான்ஈன்ற வள்ளிநாயகி. தூ அலங்கு= தூய்மைஒளிரும். நாமம்= திருப்பெயர். இணங்கலில்= இணக்கத்துடன். எனை விதித்தற்கு= என்னைப் படைத்ததனால்

**பொழிப்புரை** : தாமரைமலரில் வாழும் நான்முகன், வேதத்து ஓங்காரத்திற்குப் பொருளினைத் தவறாகக் கூறியதால், பருத்த மணிகள் பதித்த கடகம் அணிந்த வலிமையான நீண்டகையால் முன்பு குட்டியது போல்மீண்டும் வருத்தவிரும்பி, நஞ்சுபோல் பரவிய இருளினைப் பருகும் மிக்ககதிர்களுடைய காலை இளஞாயிறு சுறாமீன்கள் எறியும்கடலின் வளைந்த அலையின் உச்சியில் எழுவதுபோல; குளிர்ச்சி தழைத்த தோகையினையும் செறிந்த மயிருடைய சிறகுடன் புள்ளிகளும் உடைய மயிலின் முதுகில் சிவந்த ஒளிதிகழும் மேனியுடன் நீ இங்கு எழுந்தருளினாய். நீஎன்னை மனிதனாகப் படைத்ததனால்; தெய்வத்தன்மைவாய்ந்த தெய்வயானையம்மையும், பெருமைபொருந்திய மலையில் மான் ஈன்ற வள்ளிநாயகியும், தூய்மை ஒளிரும் வேலும், அழகியசேவற்கொடியும், ஆறுதிருமுகங்களும், திருநீறு தரித்த தோள்களும், பண்டைய மறைபுகழும்தண்டையணிந்த திருவடிகளுமுடைய கந்தனே ! உனது திருப்பெயரையும் உனதுதிருச்செந்தூரையும் வணங்கியும், தியானித்தும் வாழ்த்தியும் போற்றினேன்.( 5 )

### வெண்பா.

அதற்(கு)இதற்(கு) என்(று)உள் அவம்போக்கி ஆக்கம்
முதற்பொருட்கும் இன்றி முயன்றாம் - நுதற்கண்அவன்
சந்ததியான் அம்செய்யான் தான்உவந்து செந்தினகர்
வந்ததியா னம்செய்யா மல்.

**குறிப்புரை** : உள்= உள்ளம். அவம்போக்கி= வீணேசெலுத்தி. ஆக்கம்= உயர்வு. முதற்பொருட்கும் இன்றி= முதன்மைப்பொருளாகிய ஆன்மாவுக்கும் இல்லாமல். முயன்றாம்= செயற்பட்டோம். நுதற்கண் அவன்= நெற்றிக்கண்ணுடைய சிவபிரான். சந்ததியான்= மகன். அம் செய்யான்= அழகிய செம்மேனியனாகிய முருகன். வந்த= வந்திருப்பதை ( வந்தது என்பதன் ஈறுகுறைந்தது. செய்யுள் விகாரம் )

**பொழிப்புரை** : நெற்றிக்கண்ணுடைய சிவபிரானுக்கு மகனும், அழகிய செம்மேனியனுமாகிய முருகன் மனமுவந்து செந்திநகருக்கு வந்திருப்பதைத் தியானம் செய்யாமல், உள்ளத்தை அதற்காகஎன்றும் இதற்காகஎன்றும் பலவாறுவீணேசெலுத்தி, முதற்பொருளாகிய ஆன்மாவுக்கு உயர்வுசேர்க்காமல் செயற்பட்டோம். ( 6 )

### புயவகுப்பு - ஆசிரிய வண்ண விருத்தம்.

மலர்தலை ஞாலத்(து) அலகில வாம்முற்(று) உயிர்களும் உந்திக் கண்பண்டு தந்தன
மறைபகர் வாய்மைத் திசைமுகன் நோவுற் றிடுமுறை தண்டித்(து) அன்(று)அங்கை கன்றின
மகபதி வானத்(து) அரசுவ ழாமல் திருமுடி அன்பில் கொண்டும்பு னைந்தன
வழிபடு கீரற்(கு) அழிசிறை தீரப் பரிவொடு முந்திச் சென்(று)அஞ்சல் என்றன
குலமட மான்மெய்ப் புதல்வியும் யானைக் குமரியும் ஒன்(று)ஒத்(து) இன்பங்க வர்ந்தன
குழையுமென் வாய்மைத் தமிழும்நன் நீபத் தொடையலும் ஒண்பொன் சந்தும்த வழ்ந்தன
குரைகழல் நாடித் தொழுநெறி சேர்கொத்(து) அடியவர் தங்கள் துன்பம்க ளைந்தன
குவிமுகை வேலைக் கவிழ்இணர் மாவைத் தடிதலும் அன்றிக் குன்றும்பி ளந்தன
உல(கு)உண ராமுத் தமிழ்உணர் நீதிக் குறுமுனி வந்தித்(து) என்றும்பு கழ்ந்தன
உலைமலி வாகைத் திருநெடு வேலிற் சிரமவி தங்கட் கங்கங்கி யைந்தன
உமைமுலை பீர்விட்(டு) ஒழுகிய பாலுக்(கு) அழுதுயர் பொன்றக் கொண்(டு)அங்கண் உந்தின
உறுகெழு கோலத்(து) இருமுது சூரைக் கிளையொடும் அஞ்சக் கொன்(று)அங்கண் உந்தின
கலவம யூரத் துரகதம் ஏறிப் புவனியும் எண்திக்(கு) எங்கும் திரிந்தன

ககனவ ளாகத்(து) அளவிய கோழிக் கொடிவளர் கம்பத் தம்பம்பொ ருந்தின
கலைமதி போலத் திருமுக நீள்கண் கடைஅருள் பொங்கிச் சிந்(து)உந்தி பம்பின
கட;ல்அலை வாய்முத்(து) இனவளை வீசிக் கரைபொரு செந்தில் கந்தன் புயங்களே

**குறிப்புரை :** மலர்தலை ஞாலம்= இடம் அகன்ற உலகம். அலகிலவாம்= அளவுபடாத. முற்று= அனைத்து. உந்தி= செலுத்தி - படைத்து. கண்= உடம்பு. திசைமுகன்= நான்முகன். தண்டித்துஅன்று= குட்டிய அந்நாளில். கன்றின= சிவந்தன. மகபதி= இந்திரன். அன்பில்கொண்டு= அன்புகொண்டு. அழிசிறை= கொடுஞ் சிறை. குலமடமான்மெய்ப்புதல்வி= உயர்குலத்து இளைய மான்மகளாகிய வள்ளிநாச்சியார். யானைக்குமரி= தெய்வயானை அம்மை. ஒன்று ஒத்து= ஒன்றிய ஒரேநிலை. இன்பம் கவர்ந்தன= இன்புற்றன. வாய்மை= வலிமை - ஆற்றல். நீபத்தொடையல்= கடம்பமலர் மாலை. பொன் சந்து= பொன்போன்ற சந்தனம். குரைகழல்= ஒலிக்கும்வீரக்கழல். கொத்து= திரண்ட. குவிமுகை இணர்= கொத்தாக உள்ள மொட்டு. கவிழ்= தலைகீழான. வேலை= கடல். மா= மாமரமாகநின்ற சூரபத்மன். குன்று= கிரவுஞ்ச மலை. நீதி=முறைமை வந்தித்து= வணங்கி. பொன்ற= கெட. அங்கண்= அவ்விடம் - மார்பகங்கள். உருகெழு= அச்சம்பொருந்திய.. இருமுது சூர்= தாருகன் சிங்கமுகன். அங்கண் உந்தின= அப்போது தள்ளின. கலவ மயூரத் துரகதம்= தோகையுடைய மயிலாகிய குதிரை. புவனி= உலகம். ககனம்= ஆகாயம். வளாகம்= இடம். கம்பத்தம்பம்= கம்பத்தைத் தூணாக. கலைமதி= முழுநிலா. பம்பின= பரவின. முத்து இனவளை= முத்தும் அதற்கு இனமான சங்கும்.

**பொழிப்புரை** :இடமகன்ற இவ்வுலகில் அளவுபடாத அனைத்து உயிர்களையும் பண்டேசெலுத்தி, அவற்றுக்கு உரிய உடம்புகளைத் தந்தன; வேதத்தைக்கூறும் நான்முகன்( அதுகூறும் ஓங்காரத்துக்குத் தவறான பொருள் கூறியதால் ) துன்புறுமாறு குட்டித்தண்டித்ததால் அழகிய கைவிரல்கள் சிவந்தன; இந்திரனின் தேவருலக ஆட்சி வழுவாதிருக்க அவனுக்கு அன்புடன் திருமுடிசூட்டின; தன்னை வழிபட்ட நக்கீரனைக் கொடுஞ்சிறையில் இருந்து விடுவிக்கப் பரிவுடன் முந்திச்சென்று அஞ்சாதே என்று விடுவித்தன; மானின் மகளாகிய குலமகளாம் வள்ளிநாச்சியாரையும், தெய்வயானையம்மையையும் ஒரேநிலையில் வைத்து இன்புற்றன; குழைவானதும் ஆற்றல்மிக்கதுமாகிய தமிழ், கடம்பமலர் மாலை,பொன்போன்ற சந்தனம் ஆகியன தவழவிளங்கின; ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடிகளை விரும்பி வணங்கும்நெறியில் வாழும் திரண்டஅடியார்கூட்டத்தின் துன்பம் தீர்த்தன; கடலில் குவிந்த மொட்டுகளுடன் தலைகீழாக நின்ற மாமரமாகிய சூரனை ஆட்கொண்டதுடன் கிரவுஞ்சமலையும் பிளந்தன; உலகு உணராமுத்தமிழ் முறைமை - இலக்கணம் - உணர்ந்தஅகத்தியரால் என்றும் வணங்கிப் புகழப் பெற்றன; கொலைமலிந்த வெற்றித்திரு நெடுவேலினால் தலைமைசான்ற வேள்வியில் அவ்வப்போது பொருந்தின; உமையம்மையின் கொங்கைகள் பீர்விட்டுச் சுரந்த பாலுக்காக அழுததுயரம் கெடும்பொருட்டு அக்கொங்கைகளை நோக்கிச் சென்றன; அச்சம்மிக்க உருவமுடைய தாருகன் சிங்கமுகன் ஆகியோரை அவர்களின் படையுடன் கொன்றுவென்றன; தோகையுடைய மயிலாகிய குதிரையில் ஏறி உலகெங்கும் எட்டுத்திசைகளிலும் திரிந்தன; ஆகாயத்தைத் தொட்ட சேவற்கொடிகட்டிய கம்பமாகிய தூணினைப் பொருந்தின; முழுநிலவுபோன்ற திருமுகத்து நீண்டுவிளங்கும் கண்களில் காட்டாறுபோன்ற அருள்நீர் சிந்திப் பரவ அருளின; இங்ஙனம் விளங்கியவை முத்துகளுடன் அவற்றுக்கு இனமான சங்குகளையும் கடல் வீசிஎறிகிற கரையுடை செந்தில் கந்தனது திருப்புயங்களாகும். ( 7 )

**கலித்துறை.**

புயம்ஆ(று) இரண்டுக்கும் பொன்னணி யாம்புள்ளி மான்மகட்கும்
கயமான் மகளுக்கும் கண்ணிணை யாம்கடுங் கூற்றுவந்தால்
நயமாய தொண்டர்க்கு நற்றுணை யாம்செந்தில் நன்னகர்மே
வியமால் மருகன் திருக்கரத்(து) ஏந்திய வேற்படையே

**குறிப்புரை** : ஆறு இரண்டு= பன்னிரண்டு. புள்ளிமான்மகள்= வள்ளிநாச்சியார். கயமான்மகள்= தெய்வயானையம்மை. கண்ணிணை= அவரவர் இருகண்களும்.

**பொழிப்புரை** : பன்னிருதோள்களுக்கும் வள்ளிநாச்சியார் தெய்வயானை அம்மை ஆகிய இருவர் கண்களும் பொன்னாலான அணிகலன்கள் ஆகும்.( பெருமான் திருத்தோள்களை அக்கண்கள் அகலா ). திருமால் மருகனாய் நல்லதிருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளவனின் திருக்கரத்தில் ஏந்திய வேற்படை, கொடிய யமன்வந்தால் நல்லதொண்டர்க்கு அவனைத்துரத்தியடிக்க நல்ல துணையாகும். ( 8 )

**கலிவிருத்தம்.**

படைக்கணார் மையல்நோய்ப் படுவ தல்லது
கடைக்கண்ணால் பரகதி காணு மாறுண்டோ
உடைக்கணா திபன்தனக்(கு) இளம்செ ந்தூர்த்தமிழ்த்
தொடைக்கள்நான் றுயர்புயத் தோகை பாகனே.

**குறிப்புரை** : படைக்கணார்= வேற்படை போன்ற கண்களுடைய மகளிர். கடைக்கணால்= அவர்களது கடைக்கண் நோக்கால். பரகதி= வீடுபேறு. உண்டோ= இல்லை. கணாதிபன் தனக்கு உடை= கணங்களுக்குத் தலைவனாகிய விநாயகருடைய. இளம்= இளமை - தம்பி. தமிழ்த்தொடைகள் = தமிழ்மாலைகள். நான்று= தொங்கும். தோகை பாகன்= மயிலேறும் முருகன்.

**பொழிப்புரை** : கணங்களுக்குத் தலைவனாகிய விநாயகர்க்கு இளையவனாய், செந்தூரில் எழுந்தருளித் தமிழ்மாலைகள் தொங்கும் திருத்தோகளுடன் மயிலினை ஏறி நடத்துபவனின் வேல்போன்ற கண்களுடைய மகளிரின் கடைக்கண், காமநோக்கு உண்டாகுமே தவிர, அதனால் வீடுபேறு அடைய இயலாது. அவனது வேலின் நோக்கே வீடுபேறு தரும் என்க. **( 9 )**

**குறளடி வஞ்சிப்பா.**

பாகம்தரு பனிவான்மதி
தாரகையொடு கார்முகிலிடைப்
பொருதெனவளை யுடன்இலகிய
நவமணிஉமிழ் கலிகெழுபுனல்
திரைபொரும்ஒலி முரசுடன்அதிர்
பைந்தமிழ்வளர் செந்திலின்வரு
சேயோன்
திருந்(து)அடி துணைஎனச் சேர்பவர்
பொருந்துவர் யாரும் புகலரு நெறியே.

**குறிப்புரை** : பாகம்= பாதி. வான்மதி= வானத்து நிலவு. தாரகை= விண்மீன்கள். பொருதென= மோதுவதுபோல். கலிகெழுபுனல்= பேரொலியுடைய கடல். புகலரும் நெறி= புகுவதற்கரிய வழி. பொருந்துவர்= வீடுபேறடைவர்.

**பொழிப்புரை** : பாதிஅளவிலானதும் குளிர்ந்ததுமான வானத்துநிலவு வானத்து விண்மீன்களுடனும் கரிய மேகத்துடனும் மோதுவதுபோல், சங்குடன் விளங்கும் நவமணிகளை எறியும் பேரொலியுடைய கடல்அலைகள் தம்முள் மோதும் ஒலியுடன் முரசுஅதிரும் ஒலியும் கூடிய பைந்தமிழ்வளரும் திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானின் செம்மையான திருவடிகளைத் துணையாகச் சேர்பவர் பிறர்யாரும் புகுதற்கரிய வழியில் வாழ்ந்து வீடுபேறடைவர். **( 10 )**

**கலிப்பா.**

நெறிக்குஞ்சித் தலைமறலி நெருங்கிஎதிர் வருங்காலம்
செறிக்குஞ்சித் திகள்தருநின் செந்திலுமென் புந்தியதே
பொறிகுஞ்சித் திரத்தின்உடுப் பொரியாகப் புகுந்துகொத்திக்
கொறிக்குஞ்சித் திரச்சரணப் படைச்சேவற் கொடியோனே.

**குறிப்புரை** : நெறிக்குஞ்சி= நெறிப்புடைய முடி. மறலி= யமன். செறிக்கும்= அவனைநெருக்கும். சித்தி= வலிமை. பொறிக்கும் சித்திரத்தின் உடு= சித்திரமாகத் தீட்டப்பெற்ற விண்மீன். கொத்திக் கொறிக்கும்= கொத்திக் கடிக்கும். சித்திரம்= அழகு. சரணப்படை= காலாயுதம்.

**பொழிப்புரை** : சித்திரமாகத் தீட்டப்பெற்ற விண்மீனைப் பொரிஎன்று நினைத்துச் சென்று அதனைக் கொத்திக்கடிக்கும் அழகிய காலாயுதமுடைய சேவலைக்கொடியாக ஏந்தியவனே ! நெறிப்புடைய முடித்தலையனாகிய யமன் என்னெதிரே நெருங்கிவரும்போது, அவனை நெருக்கும் வலிமையை அருளும் உன்செந்தில் என்மனத்ததாகும்.

இச்செய்யுள் மயக்கவணியுடையது.

**வண்டோச்சி மருங்குஅணைதல் - ஆசிரிய விருத்தம்.**

கொடியாநின்(று) இடைதேய்ந்து கொழுங்கலவைத் துணைமுலையும் குழலும் தாங்கி
ஒடியாநின்(று) உளது)இன்னும் உமக்கும்இரங் காதவுளம் உளவோ வண்டீர்
வடியாநின்(று) இலங்(கு)இலைவேல் வலன்ஏந்திச் செந்தில்அரு மருந்தன் னாள்தன்
முடியாநின்(று) அளிஎனும்சொல் முடியாநின்(று) அநுராகம் முயல்கின் றீரே.

**குறிப்புரை :** இடை கொடியாநின்று= இடுப்பு மெல்லிய கொடியாகவிளங்கி. தேய்ந்து= மேலும் மெலிந்து. கலவை= கலவைச்சந்தனம். துணை= இரண்டு. ஒடியாநின்று உளது= ஒடியாமல் நிற்கிறது. வண்டீர்= வண்டுகளே ! வடியாநின்று= கூராக்கப் பெற்று. இலைவேல்= கூரிய வேல். வலன்= வலக்கை / வெற்றி. அருமருந்தன்னாள்= அமுதம் ஒத்தவள். முடியாநின்று= தலைமுடியோடு முடியாக நின்று - தலையில் மொய்த்து. அளி= வண்டு / கருணை. அநுராகம்= காமஇன்பம்.

**பொழிப்புரை :** வண்டுகளே ! கூராக்கப்பெற்ற கூரிய வேலினை வலக்கையில் / வெற்றிபொருந்த ஏந்தியவனின் திருச்செந்தூரில் அமுதம் ஒத்தவளின் தலையில் முடி மலரோடுபொருந்தி வண்டாக - கருணை வடிவாக - மொய்த்துத் தொடர்ந்து, காமஇன்பம் நுகர்கின்றீர். இவள்இடுப்பு கொடியாக விளங்கித் தேய்ந்ததுடன், வளமான கலவைச்சாந்தணிந்த கொங்கைகளையும், உம்முடன் கூந்தலின் சுமையையும் தாங்குவதால் ஒடியும்நிலையில் உள்ளது. இந்நிலையிலும் இவள்மேல் இரங்காஉள்ளம் உமக்கு உள்ளதா ? என்று கூறி வண்டோச்சி நெருங்கிச் சென்றான். ( 12 )

**வண்டுவிடு தூது - வெளிவிருத்தம்.**

ஈர நாள்முகை இளமுலைப் பசப்(பு)ஒழித்(து) அளியீரே
சூர்அன் னாள்விழித் துணையிணை கொள்வதற்(கு) அளியீரே
நார நாளமென் நளினநீர்ச் செந்தில்புக்(கு) அளியீரே
ஆரல் நாள்வரு வேங்கையின் மலர்கொணர்ந்(து) அளியீரே.

**குறிப்புரை :** ஈரம்= அன்பு. நாள்முகை= மலரும்பருவத்து அரும்பு. அளியீரே= வண்டுகளே. சூர் அன்னாள்= தெய்வப்பெண்ணை ஒத்த இவள். துணை விழி இணைகொள்வதற்கு= இருவிழிகளுக்கும் ஒப்பாக ஆவதற்கு. நாரம்= அன்பு - குளிர்ச்சி. நாளம்= உள்துளையுடைய தண்டு. மென்நளின நீர்= மென்மையான தாமரைக் குளம். ஆரல்நாள்= கார்த்திகை நாளில். வரும்= உலாவரும். வேங்கையின் மலர்= வேங்கைமரமாக நின்ற முருகனின் தோள்மாலை. அளியீரே= வண்டே. அளியீரே= வாங்கிவந்து கொடுங்கள்.

**பொழிப்புரை :** வண்டுகளே ! மலரும்பருவத்து அரும்புபோன்ற இளமுலைகளுடைய தெய்வப்பெண்போன்ற இவளது இருவிழிகட்கும் நீவிர் ஒப்பாவதற்கும் இவளது பசலையை ஒழிப்பதற்கும், குளிர்ச்சியுடையதும் உள்துளையுடைய தண்டினையுடையதுமாகிய மென்மையான தாமரைகள் பூத்த குளங்களுடைய செந்தில்நகர்க்குச் சென்று கார்த்திகை நாளில் உலாவரும் வேங்கைமரமாக நின்ற முருகனின் தோள்மாலையைக் கொண்டுவந்து வண்டே கொடுங்கள். ( 13 )

**வஞ்சித்துறை.**

அளிஆலும் சோலை
ஒளிசேர்வான் செந்தூர்
தெளிவாய்என் நெஞ்சே
அழியாவீ(டு) உண்டே.

**குறிப்புரை :** அளி ஆலும்= வண்டுகள் முழங்கும். ஒளிசேர்வான்= ஞானம்பெற. அழியாவீடு= என்றும் அழிவில்லாத. வீடுபேறு.

**பொழிப்புரை :** என்நெஞ்சே ! நீ ஞானம்பெற விரும்பினால், திருச்செந்தூரைப்பற்றித் தெளிவு கொண்டு அங்குச்செல். அதனால் உனக்கு என்றும் அழிவில்லாத வீடுபேறு வாய்க்கும். ( 14 )

**மேகவிடு தூது.**

உண்டு வாரிதி பசுஞ்சிறைக் கிளிமயில் உருவாகி
எண்தி சாமுகம் புதைத்(து)அயில் எனமினி இரைத்தீரேல்
கண்டு நான்இரு கண்களும் உள்ளமும் களிகூரக்
கொண்டல் காள்இனிச் செந்தில்வாழ் குமரனைக் கொணர்வீரே.

**குறிப்புரை** : வாரிதி உண்டு= கடலினைப்பருகி. எண்திசாமுகம்= எட்டுத்திசையிடங்கள். புதைத்து= மூடி. மினி= மின்னி. ( இடைக்குறை ). இரைத்தீரேல்= இடித்து முழங்கினால். கொண்டல்காள்= மேகங்களே. கொணர்வீர்= என்னிடம் கொண்டுவாருங்கள்.

**பொழிப்புரை** : மேகங்களே ! நீங்கள் கடலினைப் பருகி, பசியகிளி மயில் உருவம்கொண்டு, எட்டுத்திசை இடங்களையும் மூடி, மின்னி, இடித்து முழங்கினால், என்கண்களும் மனமும் மிகுகளிப்புறச் செந்தில் சென்று அங்குள்ள குமரப்பெருமானை என்னிடம் கொண்டுவாருங்கள். **( 15 )**

**அம்மானை - மடக்குத்தாழிசை.**

வீரன்நெடு வெள்வேல் வியன்செந்தில் எம்பெருமான்
பாரில்உயிர் எல்லாம் படைத்தனன்காண் அம்மானை
பாரில்உயிர் எல்லாம் படைத்தனனே ஆமாகில்
ஆரணங்கள் நான்கும் அறிவானோ அம்மானை
அறிந்து சிறைஅயனுக்(கு) ஆக்கினன்காண் அம்மானை.

**குறிப்புரை** : வெள்வேல்= ஒளியுடைய வேல். ஆரணங்கள் நான்கு= இருக்கு, யசுர், சாமம், அதர்வண வேதங்கள்.

**பொழிப்புரை** : ஒளிரும் நீண்ட வேல்ஏந்திய வீரனாகிய செந்தில் முருகப்பெருமான், இவ்வுலகில் அனைத்து உயிர்களையும் படைத்தனன் காண். அவன் அவ்வாறு படைத்தான் என்றால், அதன்பொருட்டு நால்வேதங்களையும் அறிவானோ ? அவற்றை அறிந்தததால்தான் படைப்புத்தொழில் செய்த நான்முகனைச் சிறையிலிட்டான். **( 16 )**

**இரங்கல் - வஞ்சிவிருத்தம்.**

மான்மகள் காதலர் மஞ்சுஊரும்
தேன்மலி காஉயர் செந்தூரர்
கான்மணம் நாறு கடம்பேனும்
யான்மகிழ் கூர இரங்காரோ.

**குறிப்புரை** : மான்மகள்= வள்ளிநாயகி. மஞ்சு ஊறும்= மேகம் தவழும். கா= சோலை. மணம் நாறு கால் கடம்பு= மணக்கும் ஒளியுடைய கடப்பமாலை. இரங்காரோ= மனம் இரங்கித் தரமாட்டாரோ.

**பொழிப்புரை** : மானின் மகளாகிய வள்ளிநாயகியிடம் பேரன்புடையவரும், மேகம் தவழும் உயரமான சோலைகளுடைய செந்தூரில் எழுந்தருளியுள்ளவரும் ஆகிய முருகன், நான் மிக்க மகிழ்சி கொள்ளுமாறு என்னை அணையாவிட்டாலும் தனது மணக்கும் ஒளியுடைய கடப்பமாலையையாவது எனக்குத் தரமாட்டாரோ ! **( 17 )**

**ஓரொலி வெண்டுறை.**

கார்ஏய் நிறத்தறுகண் கறுவுடைக் கடுங்கூற்றம் கலந்த காலை
யாரே விலக்குவார் அந்தோ நமரங்காள் அறிதி ரன்றே
நீரே உயப்போமா நின்று வலித்தீரேல்
கூரேய் வடிவேல் குமரன் குடநாட்டுச்
சீரேய் திருச்செந்தில் சென்று தொழுமினே.

**குறிப்புரை** : கார் ஏய்= கரியமேகம் ஒத்த. தறுகண்= அஞ்சாமை. கறுவு= சினம். நமரங்காள்= நம்மவரே. அறிதிர்= அறிந்து கொள்ளுங்கள். உயப்போம் ஆ= பிழைக்கும் விதம். வலித்தீரேல்= நினைத்தால். கூர் ஏய்= கூர்மை பொருந்திய.

**பொழிப்புரை** : நம்மவர்களே ! கரிய மேகம் ஒத்தநிறமும், அஞ்சாமையும், சினமும் கொண்ட கடுமையான யமன் உயிர்கவர வந்தால் அவனை விலக்குவார் யார் ! நீங்கள் பிழைக்கும்விதத்தை அறிந்துகொள்ளுங்கள். கூர்மை பொருந்திய வடிவுடைய வேலேந்திய முருகனைக் குடநாட்டுச் சிறப்புடைய திருச்செந்தூர் சென்று வணங்குங்கள். **( 18 )**

**வெண்பா.**

தொழு(து)இரந்து வெம்பசியால் சோர்ந்(து)இடுவார் கைபார்த்து

அழு(து)அலமந்(து) ஏங்கி அலைவார் - முழுதும்
பெருகுகனை வாரிமணி பெய்(து)இரைக்கும் செந்தில்
வருகுகனை வாழ்த்தாத வர்.

**குறிப்புரை** : இரந்து= யாசித்து. இடுவார்= தருபவர். அலமந்து= மனம் சுழன்று. பெருகு கனை= மிக்க முழக்கம். வாரி= கடல். பெய்து= கரையில் ஒதுக்கி. இரைக்கும்= முழங்கும்.

**பொழிப்புரை** : மிக்க முழக்கமிட்டு முத்தினை வாரிக்கரையில் ஒதுக்கி, முழங்கும் திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள முருகனை வாழ்த்தாதவர்; பிறரை வணங்கியாசித்து, கொடியபசியால் சோர்ந்து, பிச்சையிடுகிறவர் கையை எதிர்நோக்கி, மனம் சுழன்று, ஏங்கி அலைவர். **( 19 )**

**கலிப்பா.**

வரம்கொண்ட உமைமுலைப்பால் மணங்கொண்ட செவ்வாயும்
பரம்கொண்ட களிமயிலும் பன்னிரண்டு கண்மலரும்
சிரம்கொண்ட மறைஇறைஞ்சும் சேவடியும் செந்தூரன்
கரம்கொண்ட வேலும்என்றன் கண்ணைவிட்டு நீங்காவே.

**குறிப்புரை** : வரம்= மேன்மை. பரம்= மேலிடம் - உயர்வு. சிரம்கொண்ட= தலையில்வைத்துப் போற்றும்.

**பொழிப்புரை** : செந்திலாண்டவனின்; மேன்மையுடைய உமையம்மையின் திருமுலைப்பாலின் மணம்கமழும் செவ்வாயும், உயர்வுபெற்ற களிப்புடைய மயிலும், பன்னிருகண்களாகிய தாமரைக் கண்களும், மறைகள் தம்தலையில் வைத்துப்போற்றும் சேவடியும், கையில் ஏந்தியவேலும் என்கண்களில் குடிகொண்டன - நீங்கா. **( 20 )**

**பாண் - கலித்துறை.**

நீங்காத நேயத்தின் நீதைத்த தையலும் நின்னையன்றி
பாங்காய பாண பிரிந்ததென் றால்உமை பாலன் செந்தில்
யாம்காண லம்எனில் எம்மை வினாவுதி ஏதிலரைத்
தாங்காது நின்மதி துன்ஊசி யின்திறம் தான்பிழைத்தே.

**குறிப்புரை** : தைத்த= பொருத்திய - சேர்த்துவைத்த. தையல்= பெண்ணாகிய பரத்தை. பாண= பாணனே. பிரிந்தது என்றால்= பிரிந்தாளானால். செந்தூரில் யாம்காணலம்= திருச்செந்தூரில் நாம் (அத்தலைவனை) பார்க்கமாட்டோம். எனில்= என்றுமறுத்தால்.. எம்மை வினாவுதி= எம்மைப் பொருந்திவாழுமாறு கேட்கிறாய். ஏதிலர்= அயலார். நின்மதி= உன்அறிவாகிய. துன் ஊசியின்= தைக்கும் ஊசியின். திறம்= ஆற்றல். பிழைத்தே= சேர்த்துவைக்கத் தவறியது.

**பொழிப்புரை** : உமையம்மை மகனாகிய முருகனின் செந்திலில் தலைவனுக்குத் தோழனாகியபாணனே ! நீங்கவியலாத அன்புடன் நீ தலைவனுடன் தைத்துவைத்த - சேர்த்துவைத்த பெண்ணாகிய பரத்தை உன்சொல் கேளாமல் தலைவனை ஒதுக்கிவிட்டுப் பிரிந்தாள் என்றால் எம்மைப் பொருந்திவாழுமாறு கேட்கிறாய். நாம் அத்தலைவனைப் பார்க்கவும் மாட்டோம் என்று ஏற்காதுமறுத்தால் என்னைத் தலைவனுடன்சேர்த்துத் தைக்கும் உன் அறிவாகிய ஊசியின் ஆற்றல் சேர்த்து வைக்கத் தவறியதாகும். ( இதில் தையல், தைத்தல், பிரிதல், ஊசி என்ற சொல்லாட்சி நயம் காண்க ) **( 21 )**

**ஆசிரியவண்ணவிருத்தம்.**

பிழையாத தொண்டர் சிறிதேசெய் அன்பு பெரிதாக நெஞ்சம் மகிழ்வார்
உழைஈனும் எங்கள் குறமாது கொண்கர் உமைபாலர் தங்கும் இடமாம்
புழைவாய் திறந்து வளைசூல் உழைந்து பொழிஆரம் இந்து வெனவே
மழைபோல் முழங்கி அலைஆழி சிந்து வளம்மேவு செந்தில் நகரே.

**குறிப்புரை** : உழை= மான். புழைவாய்= துவாரமாகிய இடம். வளை= சங்கு. ஆரம்= முத்து. இந்து= நிலா. ஆழிஅலை மழைபோல் முழங்கி= கடல் அலை மேகம்போல் முழங்கி.

**பொழிப்புரை** : பிழைநினைக்காத தொண்டர்கள் சிறிதளவு அன்புசெய்தாலும் அதனால் பெரிதளவு மகிழ்பவரும், மான்ஈன்ற எமது வள்ளிநாயகியின் கணவனும், உமையம்மையின்மகனுமாகியவர்

தங்கிஇருக்கும் இடம், சங்குகள் தமது துவாரமாகிய வாய்திறந்து ஈனும் நிலவுபோல் ஒளிரும் முத்துகளை, கடல்அலை மேகம்போல் முழங்கிக் கரையில் சிந்துகிற வளம்பொருந்திய செந்தில் நகராகும். **( 22 )**

**தலைவி கூற்று - வெண்பா.**

நகைமதிய மேவடவை நாப்போல்இவ் வண்ணம்
தகைமதியா நின்று தழல்வாய் - அகமகிழ்ந்து
கற்(பு)அசலைத் தந்தார் கடல்செந்தில் வாய்எமக்குப்
பொற்பசலை தந்தார்முன் போய்.

**குறிப்புரை** : நகை= ஒளி. வடவை நாப்போல்= வடவைத்தீயின் நாக்குப்போல். இவ்வண்ணம்= என்னைச்சுடும் இதுபோல். தகைமதியா நின்று= அவன் தகுதியை மதிக்காமல். தழல்வாய்= சுடுவாயாக. கற்பு அசல் - அசல் கற்பு= உயர்வாகிய கற்புவாழ்வு. பொன்பசலை= பொன்போலும் பசலைநிறம்.

**பொழிப்புரை** : ஒளியுடைய நிலவே ! என்னை வடவைத்தீயின் நாக்குப்போல் சுடும் நீ, கடலுடைய செந்திலின்கண் அன்று மனம்மகிழ்ந்து எமக்கு உயர்வாகிய கற்புவாழ்வு தந்து இன்று பொன்போலும் பசலைநோய் தந்தவராகிய முருகன்முன்போய் அவருடைய தகுதியை மதிக்காமல் அவரைச் சுடுவாயாக. **( 23 )**

**கலித்துறை.**

போய்வத னாரம்பம் ஆடார் திருச்செந்தில் புக்(கு)உறையார்
சேய்மலர்த் தாளிணை சிந்தைசெய் யார்திரு மால்மருகன்
காய்சின வேலும் மயிலும்என் னார்கடல் சூழ்உலகில்
பேய்அறி வாளர்எவ் வா(று)அறுப் பார்தம் பிறப்பினையே.

**குறிப்புரை** : வதனாரம்பம்= செந்தில்முருகன் திருமுன் உள்ள தீர்த்தம் - கடல். காய்= அழிக்கும். பேய் அறிவாளர்= மூடர்.

**பொழிப்புரை** : மூடர், செந்தில் கடலுக்குப்போய் அதில் நீராடார், செந்தில்நகரில் வாழார், சேயாகிய முருகனின் இருதிருவடி மலர்களையும் தியானியார், திருமால்மருகனின் பகையழிக்கும் வேல் மயில் என்று கூறார். இவ்வுலகில் அவர்கள் தமது பிறப்பை எவ்வாறு அறுத்து வீடுபெறுவர். **( 24 )**

**தலைவி நெஞ்சொடுகிளத்தல் - ஆசிரியத்தாழிசை.**

பிறர்வாய் வசைஅடங்கப் பிஞ்ஞகன்சேய் திண்தோள்
நற(வு)ஆர் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
சிறைவான் புனல்செந்தில் சேருதுமால் நெஞ்சே
குயில்வாய் ஒலிஅடங்கக் கூத்தன்சேய் திண்தோள்
நயமாம் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செயிர்தீர் புனல்செந்தில் சேருதுமால் நெஞ்சே
முந்நீர் ஒலிஅடங்க முக்கணன்சேய் திண்தோள்
நன்னீர்த் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செந்நீள் புனல்செந்தில் சேருதுமால் நெஞ்சே.

**குறிப்புரை** : வசை= பழிதூற்றுதல். நறவு= தேன். துணர்= பூங்கொத்து. சிறைவான்= காவல்மிக்க மேலான. புனல்= கடல். சேருதுமால்= சேருதும்= சென்றடைவோம் ( ஆல்= அசை ) கூத்தன்= சிவபிரான். நயமாம்= நன்மைதரும். செயிர்தீர்= குற்றங்களைத்தீர்க்கும். முந்நீர்= கடல். முக்கணன்= சிவபிரான். நன்னீர்= நல்லியல்பு. செந்நீள்= அழகு நீண்ட.

**பொழிப்புரை** : நம்மை வதைக்கும் அயலார்வாய் கூறும் பழிதூற்றுதல் அடங்கும்பொருட்டு, சிவபிரானுக்கு மகனாகிய முருகன்தன் திண்ணிய தோள்களில் அணிந்துள்ள தேன்பொருந்திய பூங்கொத்துகளால் ஆன கடம்பமலர்மாலையை நாம் பெறவேண்டி எல்லைகடவாத காவல்மிக்க மேலான கடலுடைய செந்தில் நகரடைவோம். நம்மைத் துன்புறுத்தும் குயிலின்குரல் அடங்கும்பொருட்டு, சிவபிரானுக்கு மகனாகிய முருகன்தன் திண்ணிய தோள்களில் அணிந்துள்ள நன்மைதரும் பூங்கொத்துகளால் ஆன கடம்பமலர் மாலையை நாம்பெறவேண்டி, நீராடியவர் குற்றம்தீர்க்கும் கடலுடைய செந்தில்நகரடைவோம். நம்மை வாட்டும் கடலின் ஒலி அடங்கும்பொருட்டு, சிவபிரானுக்கு மகனாகிய முருகன்தன் திண்ணிய தோள்களில் அணிந்துள்ள நல்லியல்புடைய பூங்கொத்துகளால் ஆன கடம்பமலர்

மாலையை நாம் பெறவேண்டி, அழகுநீண்ட கடலுடைய செந்தில்நகரடைவோம்.
( காதல்விரகநோய் கொண்ட தலைவியைப் பிறர் கூறும் அலர், குயிலின்குரல், கடலோசை ஆகியன வருத்துதலால் அவை அடங்கவேண்டும் என்றும், அதற்குச் செந்திலான் தோள்மாலைபெறச் செல்வோமென்றும் நெஞ்சுக்கு எடுத்துக் கூறினாள். ) **( 25 )**

**கைக்கிளை - மருட்பா.**

நெஞ்சே நுதல்வியர்க்கும் நீடுகுகன் செந்தில்அன்னாட்(கு)
அம்சேல் விழிகள் அவைஇமைக்கும் பஞ்(சு)ஏர்
அடிநிலம் தோயும் அதனால்
கமழும் குழல்இவள் கடலிடத்(து) அணங்கே.

**குறிப்புரை** : அம்சேல்= அழகிய கெண்டைமீன். பஞ்சு ஏர்= பஞ்சுபோல் மென்மையான அழகிய. கடலிடம்= பூவுலகம்.

**பொழிப்புரை** : நெஞ்சமே ! பெரும்புகழ்வாய்ந்த முருகனது செந்தில் ஒத்தஇவளுக்கு நெற்றி வியர்க்கிறது, அழகிய கெண்டைமீன்போன்ற கண்கள் இமைக்கின்றன, பஞ்சுஒத்த மென்மையான அழகிய கால்கள் நிலத்தில் தோய்கின்றன. எனவே இவள் பூவுலகப்பெண்ணே என்று அவள்மேல் தான்கொண்ட ஒருதலைக் காதலைப் புலப்படுத்தினான். **( 26 )**

**பாங்கிவேண்டல் - வெண்பா.**

அணங்காம் இவளுக்(கு) அவிர்மதியம் ஒன்றோ
வணங்கா வருந்தென்றல் ஒன்று = வணங்கூர்
இளமுருகா செந்தினகர் எந்தாய்வந் தாளாய்
உளம்உருகா வேய்இசையும் ஒன்று.

**குறிப்புரை** : அணங்கு= தெய்வப்பெண். மதியம்= நிலா. அணங்கா வரு= வருத்தவரும் ( அணங்கா- செய்யாஎன்னும் வாய்பாட்டு வினையெச்சம் ) வணம்கூர்= அழகுமிக்க ( வணம் - இடைக்குறை ) உளம் உருகா= மனமிரங்காத. வேய்= புல்லாங்குழல்.

**பொழிப்புரை** : அழகுமிக்க இளையமுருகனே ! செந்தில்நகர் எம்தந்தையே !தெய்வப்பெண்ணாகிய இவளை வருத்துவது ஒளிரும் நிலாமட்டுமா ? வருத்தவரும் தென்றல் ஒன்று; இவள்மேல் மனமிரங்காத புல்லாங்குழல் இசைமற்றொன்று. எனவே நீவந்து இவளை ஆள்வாயாக.
( விரகம்பட்டாரை; நிலா, தென்றல், குழலிசை முதலியன அந்நோயை மிகுவித்து வருத்துவன. **( 27 )**

**தலைவியை வியத்தல் - கலித்துறை.**

ஒன்(று)உடை யான்புலித் தோலுடை யான்மைந்தன் ஓங்குபரங்
குன்றுடை யான்திருச் செந்தில்அன் னார்குல வாழைஇள
மென்துடை யால்நடை யால்விழி வேல்கடையால்
நின்றுஉடை யாநிற்ப ரால்எவ ரேனும்நி லைகுலைந்தே

**குறிப்புரை** : ஒன்றுஉடையான்= அடியவருடன் ஒன்றிஇருப்பவனும், அன்னார்= போன்றவளது. குலம்= நன்மை. நின்று= எதிர்நின்று. உடையாநிற்பர்= மனம் தளர்வர்.

**பொழிப்புரை** : அடியவருடன் ஒன்றிஇருப்பவனும் புலித்தோலை உடுத்தவனும் ஆகிய சிவபிரான் மகனாய், சிறந்த திருப்பரங்குன்றுக்கு உரியவனது திருச்செந்தில் ஒத்த இவளது நன்மையமைந்த இளவாழைபோன்ற தொடையால், நடையால், இடையால் வேல்போன்ற விழியின் கடைப்பார்வையால் எதிர்நிற்பவர் யாரேயாயினும் மனம்தளர்ந்து நிலைகுலைவர்.. **( 28 )**

**மதங்கியார் - கலித்தாழிசை.**

குலைகுலுங்கு வாழையின் கோழ்இலைப் பசுங்கொடைக்
குளிர்நிழற்கண் இரவிதேர்க் குரகதங்கள் அருவிபாய்
அலைகுலுங்கு நறவம்உண்(டு) அயர்(வு)உயிர்த்த காவுசூழ்
அங்கண்எந்தை செந்தில்பாடி ஆடுமாம தங்கியார்
முலைகுலுங்கும் ஆகில்மாரன் முடிகுலுங்கும் அமுதவாய்
மொழிகுலுங்கும் ஆகில்ஆவி பழிகுலுங்கும் அல்குல்அம்

கலைகுலுங்கும் ஆகில்நாடு நிலைகுலுங்கும் மாமுகக்
கஞ்சமும்கு லுங்குமாகில் நெஞ்சமும் குலுங்குமே.

**குறிப்புரை** : குலுங்கல்= அசைதல். கோழ் பசு இலைக்கொடை. கோழ்= வளம். இரவி= சூரியன். குரகதம்= குதிரைகள். அலைகுலுங்கு அருவிபாய். நறவம்= தேன். அயாவுயிர்த்த= களைப்பை நீக்கிக்கொள்ளும்.கா= சோலை. அங்கண்= கருணைக்கண்கள். மா= அழகு. முடிகுலுங்கும்= தலையசைத்து எழுவான். ஆவி பழிகுலுங்கும்= உயிர் பழிச்செயலில் நிறையும். நிலைகுலுங்கும்= நிலைகெடும்.

**பொழிப்புரை** : குலையுடன் அசைகிற வாழையின்வளமான பசிய இலைகளின் கொடையான குளிர்ந்த நிழலில் சூரியனின் தேர்க்குதிரைகள் அலையாகஅசையும் அருவியாகப் பாயும்தேனினைப் பருகிச் சோர்வு நீங்கும் சோலைகள் சூழ்ந்த கருணைகண்களுடைய எமது செந்திற்பெருமானின் புகழ்பாடி ஆடும் அழகிய மதங்கியாரின் முலைகள் அசையுமாகில் மன்மதன் தன்தலையசைத்து எழுவான். அவளின் அமுதமூறும் வாய்மொழி அசையுமாகில் - வெளிப்படுமாகில் அதனைக்கேட்கும் உயிர் பழிச்செயலில் நிறையும். அவளின் அல்குலைமூடிய ஆடைஅசையுமாகில் நாடே நிலைகெடும். அவளது அழகிய முகமாகிய தாமரை இசைவுகாட்டி அசையின் காண்பவர்மனம் தன்நிலையில் கெடும்.

இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலை அணி. **( 29 )**

**இரங்கல் - இன்னிசை வெண்பா.**

குலுங்கு முலைமேல் குளிர்பசலை கண்ணீர்
அலங்கும் அருநாணும் ஆய்வளையும் நீங்கும்
இலங்(கு)இலைவே லோனை எறிகடற்செந் தூர்வாய்
வலம்கொளமுன் போம்மடவார் மாட்டு.

**குறிப்புரை** : அலங்கும்= விளங்கும். அரு=நீங்கக்கூடாத. வலம்கொள= சுற்றிவந்து வணங்க.

**பொழிப்புரை** : இலைவடிவில் விளங்கும் வேலேந்திய முருகனைத் திருச்செந்தூரில் கண்டு வலம்வந்து வணங்கச் செல்லும் மடவார்க்கு, அவர்களது குளிர்ந்த அசையும் முலைகளில்பசலையும், கண்ணீரும் விளங்கும் ; நீங்குதற்கரிய நாணும் ஆராய்ந்து அணிந்த வளையலும் நீங்கும். ( அவர்கள் அவனைக் காமுறுவர் என்றார். ) **( 30 )**

**சித்து - ஆசிரியவிருத்தம்.**

மாட்டேம் அல்லேம் சித்துவித்தை மகனே செந்தில் குகன்பால்நாம்
கேட்டே அறிந்த(து) உனக்(கு)உரைப்பக் கேளாய் இதுபொய் அலமெய்யே
வேட்டேம் பசியால் உண்ணஇன்று விளங்கும் கஞ்சம் தனிலேபொன்
காட்டேம் ஆகில் நீபடைத்த கறியும் சோறும் வேண்டாவே.

**குறிப்புரை** : மாட்டேம் அல்லேம்= செய்யமுடியாதவரில்லை. பசியால் உண்ணவேட்டேம். வேட்டேம்= விரும்பினோம். கஞ்சம்= வெண்கலம் / தாமரை. பொன்= தங்கம் / திருமகள். காட்டேமாகில்= செய்துகாட்டாவிடில்.

**பொழிப்புரை** : மகனே ! நாம் சித்தாகிய வித்தையைச் செய்யமுடியாதவரில்லை. செந்தில் முருகனிடம் நாம் கேட்டறிந்ததை உனக்குச் சொல்கிறேன்கேள். நான்சொல்வது பொய்யல்ல. உண்மையேஆகும். இப்போது பசியால் உண்ண விரும்பினோம். ஆயினும், வெண்கலத்தில், ஒளியுடன் விளங்கும் தங்கத்தை உனக்குக் காட்டவில்லை என்றால் / தாமரை மலரில் திருமகளைக் காட்டாவிடில் ) நீஎனக்குப் படைக்கவிருக்கும் கறியும் சோறும் வேண்டாம்.

( இது" பொய்யல மெய்யே " என்ற தொடர் சொல்வது பொய்யல்ல உண்மையே என்றும், இதுபொய், மெய் அல்லவென்றும்பொருள்தரும். " விளங்கு கஞ்சம்தனிலே பொன் காட்டேமாகில் " என்பது பொய், " தாமரையில் திருமகளைக்காட்டல்" என்பது மெய் ) (" படைத்த " என்பது காலவழுவமைதி,) **( 31 )**

**இரங்கல் - கலித்துறை.**

வேண்டின ரானால் ஊன்நகு வேலர் வியன்செந்தில்
ஆண்டகை ஆனார் மான்அனை யாரை அகல்வாரோ
கூண்(டு)அடல் வில்லிட்(டு) அம்பு சொரிந்தே கொலைவேடம்
பூண்டு நெருங்கிக் கொண்டல் முழங்கிப் பொழிநாளே.

**குறிப்புரை** : வேண்டினரானால்= விரும்பியவவர் என்றால். ஊன்நகு= புலால்விளங்கும். மான் அனையாரை= மான்போன்ற இவளை. கூண்டு= கூடி. அடல் அம்பு= மிக்கமழைநீர். பொழிநாள்= மழை பொழியும் நாளில். கூண்டு...... அகல்வாரோ என்க.

**பொழிப்புரை** : புலால்விளங்கும் வேலேந்தியவரும், அகன்ற செந்திலாண்டகையும் ஆகியவர், விருப்பமுடையவர் என்றால், மான்போன்ற இவளைக் கூடிஇன்புற்றபின், வானவில்லிட்டு மேகம்செறிந்து இடிஇடித்துமிக்க மழை கொலைவேடம் பூண்டு பொழியும்நாளில் இவளைப் பிரிவாரோ ? பிரிந்தாராதலின் விருப்பிலார் என்றாள். ( 32 )

**பனிக்காலம் - வஞ்சித்தாழிசை.**

நாள்வனச முகம்கூம்ப நீள்குளிர்செய் பனிக்காலம்
வேள்மருவு செந்திலின்எம் கேள்வர்தமை நினையாவே
மகன்றிலொடும் பெடைசேவல் புகன்(று)அணையும் பனிக்காலம்
குகன்தனது செந்திலின்எம் அகன்றவரை நினையாவே
தொலைபவர்மெய் குனியமதன் சிலைகுனியும் பனிக்காலம்
மலைமகள்சேய் செந்திலின்எம் தலைவர்தமை நினையாவே..

**குறிப்புரை** : நாள்வனசம்= அன்றுபூத்த தாமரைமலர். கூம்ப= வாட. வேள்மருவு= மன்மதன் வாழும். கேள்வர்= கணவர். மகன்றில்= அன்றில்பறவை. புகன்று= கூவிஅழைத்து. அணையும்= கூடிமகிழும். அகன்றவரை= பிரிந்தகணவரை. தொலைபவர்= பிரிந்தவர். மெய்குனிய= உடல்வளைந்து குனிய. சிலை குனியும்= வில்வளைக்கும்.

**பொழிப்புரை** : அன்றுபூத்த தாமரைமலர் ஒத்த முகம்வாட மிக்ககுளிர்செய்கிற பனிக்காலமானது மன்மதன்வாழும் செந்தில்நகரில் என்கணவரைப்பற்றி நினைக்கவில்லை. ஆண்அன்றில் பறவை தன்பெட்டையைக் கூவியழைத்துக் கூடிமகிழும் பனிக்காலமானது குகனது செந்தில்நகரைவிட்டுப் பிரிந்த எம்மவரை நினைக்கவில்லை. பிரிந்தவர், குளிரால் உடல்வளைந்து குனியுமாறு மன்மதன் தன்வில்லினை வளைக்கும் பனிக்காலமானது பார்வதிதேவியின் மகனது செந்திலில் எம்கணவரை நினைக்கவில்லை, ( பனிக்காலமானது பிரிந்துள்ள என்கணவரைப்பற்றி நினைக்காமையால், அதுஅவரை வருத்தவில்லை போலும். நினைத்து வருத்தியிருப்பின் வந்திருப்பார் என்றாள். ) ( 33 )

**வெண்டாழிசை.**

நினைவும் ஒன்றே உரையும் ஒன்றே
பனவன் செந்தில் பணியா(து) ஒன்றே
வினையில் வீழ்ந்தவர் பால்.

**குறிப்புரை** : பனவன்= முருகக்கடவுள். பணியாது ஒன்றே= வணங்காத ஒரேகாரணத்தால். வினை= தீவினை.

**பொழிப்புரை** : செந்திலில் எழுந்தருளியுள்ள முருகக்கடவுளை வணங்காத ஒரேகாரணத்தால் தீவினைப்பட்டவரிடம் நினைவு ஒன்றாகவும், சொல் ஒன்றாகவும் இருக்கும். ( 34 )

**கலிப்பா.**

பால்வெள்ளை நீற்றானும் பல்லுயிரும் படைத்தானும்
சூல்வெள்ளை மணிப்பணிலம் சுமந்ததிருக் கரத்தானும்
சால்(பு)எள்ள இயலாத தனிநெடுவேல் படையானும்
சேல்வெள்ளம் பரந்(து)உலவும் திருச்செந்தில் இடத்தானே.

**குறிப்புரை** : பால்வெள்ளை நீற்றான்= தூய வெள்ளைநிறத் திருநீறணிந்த சிவபிரான். வெள்ளை மணி சூல்பணிலம்= வெண்முத்தினை கருக்கொண்டு ஈன்ற சங்கு. எள்ள இயலாத சால்பு= இகழவியலாத மாட்சிமை. திருக்கரத்தான்= அழகிய கையில் ஏந்திய திருமால். செந்தில் இடத்தான்= செந்திலில் எழுந்தருளி இருப்பவனே.

**பொழிப்புரை** : தூயவெண்ணீறணிந்த சிவபிரானும், பல்வகைப்பட்ட உயிர்களையும் படைத்த நான்முகனும், வெண்முத்தினைக் கருக்கொண்டு ஈன்ற சங்கினை ஏந்திய திருமாலும் கெண்டைமீன்

உலவும் கடலுடைய திருச்செந்தூரில் எழுந்தருளியிருப்பவனே ஆவான். ( செந்திலான் ஒருவனே மூவரும் ஆவான் என்றார் ) ( 35 )

**கலித்துறை.**

இடத்தானம் ஆறுஎழுத்(து) எண்ணக்கண் ணார்நின் இணையடிகும்
பிடத்தானம் ஆறும் பிரியா திருக்கப் பெருங்கருணைக்
கடல்தான் எனக்(கு)அருள் வாய்செந்தில் வாய்தென் கலைமுழுதும்
குடத்தான மாதவற்(கு) ஓதிய ஞானக் குருபரனே.

**குறிப்புரை** : தானம் இட= கொடைகொடுக்க. ஆறு எழுத்து= திருஆறெழுத்து - சரவணபவ. தானம் ஆறும்= மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை ஆகிய ஆறு ஆதாரங்கள். பிரியாதிருக்க= நீ பிரியாதிருக்க. தென்கலை= தமிழ். குடத்தானமாதவன்= அகத்தியர்.

**பொழிப்புரை** : அகத்தியர்க்குத் தமிழ் ஓதிய செந்திலில் எழுந்தருளியுள்ள ஞானவடிவாகிய குருபரனே ! சிலர் கொடைகொடுக்கவும், திருஆறெழுத்தாகிய சரவணபவ என்பதை எண்ணவும் கருதமாட்டார். ஆனால் நான் உனது இரு திருவடிகளைக் கும்பிடவும் என்ஆறுஆதாரங்களிலும் நீ பிரியாதிருக்கவும் உனது பெருங்கருணையாகிய கடலினை எனக்கு அருள்வாயாக. ( 36 )

**மடக்கு - ஆசிரிய விருத்தம்.**

பரவு வாரி வளையீரே பரவு வாரி வளையீரே
பட௫ நாக வரும்பீரே பட௫ நாக வரும்பீரே
அரவப் புணரி மகரமே அரவப் புணரி மகரமே
அவலம் கழிய நந்தனமே அவலங் கழிய நந்தனமே
பிரமாத் தண்ட லைப்புடைத்தான் பிரமாத் தண்ட லைப்புடைத்தான்
பிறவான் உழைசெந் தினகரனே பிறவான் உழைசெந் தினகரனே
உரவ ராலே நாவாயே உரவ ராலே நாவாயே
ஓதக் கடன்நீர்க் குருகீரே ஓதக் கடன்நீர் குருகீரே.

**குறிப்புரை** : பரவு வாரி வளையீரே= பரவியுள்ள கடலில் உள்ள சங்குகளே. பரவு வாரி வளையீரே= புகழப்பெறும் ( தலைவன் ) வரின்அவனைச் சூழ்ந்து வளைத்துக் கொள்ளுங்கள். படு அரு நாக அரும்பீரே= தோன்றியுள்ள அரிய புன்னைஅரும்புகளே. படரும் பீர் நாக வரும்= படர்ந்துவரும் பசலை மலைபோல் வருகிறது. அரவப் புணரி மகரமே= முழங்கும் கடல் மீன்களே. அரவ புணர் இமகரமே= (என்னைத்) தேய்த்து அழிக்க வந்தன குளிர்ந்த (நிலவின் கைகளாகிய) கிரணங்கள். அவல் அம் கழிய நந்து அனமே= பள்ளமான அழகிய கழிகளில் உள்ள மிக்க அன்னப்பறவைகளே. நம்தனமேஅவலம் கழிய= நம் முலைகளின் வருத்தம் மிகுந்தது. பிரமாத் தண் தலையைப் புடைத்தான்= பிரமனின் புல்லறிவு உடைய தலையில் குட்டியவன். பிரமா அலை தண்டு புடைத்தான்= பிரமையைசெய்யும் (சூரபன்மனின்) சேனையை அழித்தவனாவான். உழை செந்தினகரன் பிறவான்= விடியலில் வரும் செஞ்ஞாயிறு வரவேஇல்லை. ( இராப்பொழுது கழியவில்லை என்க ).உழை செந்தில் நகரன் பிறவான்= என்னருகில் செந்தில் நகருக்கு உரிய முருகன் தோன்றவில்லை - வரவில்லை. உரவர் நா வாய் ஏ ஆலல்= வலியவர்களின் நாவும் வாயும் பழிகூறி ஒலிக்கின்றன. ஓதக் கடல்நீர்க் குருகீரே= ஒலிக்கும் கடலின் நாரைகளே. குருகீர் நீர் ஓதக் கடன் நாரைகளே= நாரைகளே நீங்கள் (என்துன்பத்தை முருகனிடம் )) சொல்லக் கடமைப்பட்டவர்கள்

**பொழிப்புரை** : பரவியுள்ள கடலில் உள்ள சங்குகளே ! புகழப்பெறும் தலைவன் வரின் அவனைச் சூழ்ந்து வளைத்துக் கொள்ளுங்கள். தோன்றியுள்ள அரிய புன்னை அரும்புகளே ! படர்ந்துவரும் பசலை மலைபோல் வருகிறது. முழங்கும் கடல் மீன்களே ! என்னைத்தேய்த்து அழிக்க வந்தன குளிர்நிலவின் கைகளாகிய கிரணங்கள். பள்ளமான அழகிய கழிகளில் உள்ள மிக்க அன்னப்பறவைகளே ! நம்முடைய முலைகளின் வருத்தம் மிகுந்தது. பிரமனின் புல்லறிவு உடைய தலையில் குட்டியவன் பிரமைக்கச் செய்யும் சூரபன்மனின் சேனையை அழித்தவனாவான். விடியலில் வரும் செஞ்ஞாயிறு வரவே

இல்லை - இராப்பொழுது கழியவில்லை. செந்தில் நகருக்குரிய முருகன் என்னருகில் வரவில்லை. வலிய வரால்மீன் மற்றும் நாவாய்களே வலியவர்களின் நாவும்வாயும் பழிக்கின்றன.ஒலிக்கும் கடல் நாரைகளே ! என்நிலையை - துன்பத்தை நீங்கள் முருகனிடம் சொல்லக் கடமைப்பட்டவர்கள். ( 37 )

**தலைவியை வியத்தல் - கலிப்பா.**

கீரம்அவை ஓர்இரண்டும் கிளவிதனக்(கு) இணையாகும்
ஆரம்அவை ஓர்இரண்டும் அலர்முலைமேல் அணியாமால்
தாரம்அவை ஓர்இரண்டும் தாம்உடையான் செந்தில்அன்ன
கோரம்அவை ஓர்இரண்டும் கொண்டமதர் விழியார்க்கே.

**குறிப்புரை** : கீரம் இரண்டு= பால், கிளி. கிளவி= சொல். ஆரம் இரண்டு= முத்துமாலை, சந்தனம். தாரம் இரண்டு= வள்ளிநாயகி, தெய்வயானையம்மை. கோரமிரண்டு= அச்சம், கொடுமை. மதர்[= மகிழ்ச்சி. செந்தில் அன்ன= திருச்செந்தூர் போல் இன்பம்செய்வன.

**பொழிப்புரை** : பாலையும் கிளியையும் ஒப்பன தலைவியின்சொற்கள்; சந்தனமும்முத்துமாலையும் அவளது முலைகளுக்கு அழகுசேர்ப்பன; அச்சமும் மகிழ்ச்சியும் கொண்ட மகிழ்ச்சிகாட்டும் விழிகள் வள்ளி தெய்வயானை ஆகிய இருமனைவியுடைய முருகனின் செந்தில் போல் இன்பம்செய்வன. ( 38 )

**ஊசல் - ஆசிரிய விருத்தம்.**

ஆர்க்கும்மது கரம்ஆட மாலை ஆட
அணிகலையும் மேகலையும் இடையும் ஆட
வார்க்குவிமென் முலையும்மணி வடமும் ஆட
மதிமுகமும் நுதல்வியர்வும் நகையும் ஆடத்
தார்க்கமல அடிச்சிலம்பு புலம்பி ஆட
தாழ்குழலும் நீள்விழியும் தழுவி ஆடக்
கார்க்கதிர்வேல் குகன்செந்தில் பாடி ஆடிக்
கோகனகத் திருவனையீர் ஆடீர் ஊசல்.

**குறிப்புரை** : மதுகரம்= வண்டு. வார்= முலைக்கச்சு.. நசை= விருப்பம். நகையும் ஆட= புன்முறுவலும் காண்போரை வெற்றிகொள்ள. தார்= பூ. புலம்பி= ஒலித்து. தழுவி= கலந்து. கார்= அழகு. கோகனகத் திரு= தாமரையில் இருக்கும் திருமகள். ஆடீர்= ஆடுக.

**பொழிப்புரை** : தாமரைமலரில் இருக்கும் திருமகளை ஒத்த பெண்களே ! ஆரவாரிக்கும் வண்டுகள் எழுந்தாட, மாலைஆட, ஆடையும் அணிந்த மேகலையும் இடையும்ஆட, கச்சணிந்த குவிந்த மென்மையான முலையும் மணிகள் பதித்த மாலையும் ஆட, நிலவு ஒத்தமுகமும் நெற்றிவியர்ப்பும் புன்முறுவலும் காண்போரை வெற்றிகொள்ள, தாமரைமலர் ஒத்த பாதத்தில் அணிந்த சிலம்பு ஒலித்து ஆட, நீண்டகூந்தலும் நீண்ட விழிகளும் பொருத்தமுறக் கலந்து ஆட, அழகிய ஒளிவடிவான வேலேந்திய முருகனுடைய செந்திலைப்பாடி ஊசல் ஆடுக.

இச்செய்யுள் சொல்பின்வருநிலை அணி. ( 39 )

**ஆசிரியவிருத்தம்.**

ஊச லாட்டெனப் போய்வரு பிறப்புஎனும் உடற்பொறைச் சிறுவீட்டில்
தேசி லாதபுல் அறிவுடை வாழ்க்கையின் பிறந்(து)இறந்து ஒழிவேனோ
காசி லாநெடுங் கடல்அலை வாய்த்தடங் கரைவரி வளைஈன்ற
மாசி லாமணி ஏய்செந்தில் மேவிய வானவர் பெருமானே.

**குறிப்புரை** : ஊசலாட்டு என= ஊஞ்சல் ஆடுவதுபோல. போய் வருபிறப்பு= இறந்து வரும் பிறப்பு. பொறைஉடல் சிறுவீடு= பாரமான உடம்பு என்னும் அற்பவீட்டில். தேசு= ஒளி. காசு இலா= குற்றமில்லாத. அலைவாய்= அலைமோதும் கரையில். ஏய்= ஒத்த.

**பொழிப்புரை** : குற்றமில்லாத நீண்டகடலின் அலைமோதும் கரையில் வளைந்த சங்கு ஈன்ற மாசில்லாத முத்துஒத்தவனாகச் செந்திலில் எழுந்தருளியுள்ளவனாகிய வானவர்பெருமானே ! அங்கும் இங்குமாக இறந்தும் பிறந்தும்வரும் பாரமானஉடம்பு என்னும் அற்பவீட்டில் ஒளிஇல்லாத அற்பஅறிவு உடைய இவ்வாழ்க்கையில் பிறந்தும் இறந்தும் வீணாவனோ ! அழியாவீடருள்க. ( 40 )

**களி - தாழிசை.**

பெருமை மாநிலம் வலம்அ தாய்வரு பீலி மாமயில் ஊர்தியார்
பிள்ளை யார்வளர் செந்தில் அம்பதி உன்ன மேதகு களியரேம்
பரைம னோன்மணி புவனி நாரணி பால லோசனி சூலிசாம்
பவிசு காசினி கௌரி பூசனை பண்ணும் உள்மகிழ் எளியதோ
மருவு கேழலும் மீனும் ஆமையும் மாய னுக்குவி ருப்பமாம்
மானி னைக்கை விடான்உ ருத்திரன் மதியும் நாடொறும் முயலுண்ணும்
அரிய வேள்வியில் அந்த ணாளர்கள் சுரபி கண்டிடின் முந்துவார்
அய்ய னேசுரர் ஆயி னார்சுரை அருந்த வானவர் யாருமே.

**குறிப்புரை** : பீலி மாமயில்= தோகையுடைய அழகியமயில். ஊர்தியார்= முருகன். உன்ன= நினைத்ததனால்.களியரேம்= கள் குடித்த மகிழ்ச்சியர் நாம். எளியதோ= எளியதன்று - அரியது.. மருவு= பொருந்திய. கேழல்= பன்றி. மாயனுக்கு= திருமாலுக்கு. உருத்திரன்= சிவபிரான். மதி= நிலா. முயல் உண்ணும்= களங்கத்தை -(முயலை)சாப்பிடும். அந்தணாளர்கள்= வேள்வி அந்தணர்கள். சுரபி= அவிப்பசு.. சுரர்= தேவர்கள். சுரைகண்டிடின் முந்துவார்= சுராபானமாகிய கள்ளைக் கண்டால் குடிக்க முந்துவார்கள்.

**பொழிப்புரை** : ஐயனே ! பெரிய உலகை வலமாகவந்த தோகையுடைய மயிலை ஊர்தியாக உடைய முருகனாகிய பிள்ளை எழுந்தருளியுள்ள செந்தில் ஆகிய அழகிய நகரினை எண்ணும் மேன்மைபொருந்திய கட்குடியர் நாம். பரை, மனோன்மணி, புவனி, நாரணி, பாலலோசனி, சூலி, சாம்பவி, சுகாசினி ஆகிய கௌரியைப் பூசனை செய்வதன் காரணமாக எம்போல் உள்ளம் மகிழ்தல் அரியதாகும். திருமாலுக்குப் பொருந்திய பன்றி மீன் ஆமையும் விருப்பமானவை. சிவபிரான் கையில் பிடித்த மானினை விடமாட்டான். நிலவு நாடோறும் விடாது முயலினை விரும்பும். சிறந்த வேள்வியில் வேள்விஅந்தணர்கள் வேள்விப்பசுவைக் கண்டால் அதை உண்ண விரும்புவார். தேவர்கள் அனைவரும்சுராபானமாகிய ஒருவகைக்கள்ளினைப் பருகுவர்.

திருமால் பன்றி மீன் ஆமை அவதாரம் எடுத்ததால் அவற்றில் அவருக்கு விருப்பம்என்றும், சிவன்தன் கையில் என்றும்மான் ஏந்தியவன் என்றும், நிலவு களங்கத்தையுடையதாதலின் அது முயலினை - களங்கத்தை விரும்புமென்றும், அவிப்பசுவை வேள்விஅந்தணர் உண்ணும் வழக்கத்தையும், தேவர்கள்அனைவரும் சுராபான விருப்பினர் என்றும் உள்ளவாறு களியர் கூறினர் . **( 41 )**

**வேற்றொலிவெண்டுறை.**

யாரும்இணை அடிவணங்கும் எம்பெருமான் தும்பிமுதற்(கு) இளையோன் செந்தில்
தூருடைய சுடர்வடிவேல் துணர்க்கடம்பந் தொடைக்குமரன் தொழுகிலாதார்
விரிநீர் புடைசூழ் வியல்மே தினிமேல்
பரிவால் உறுநோய் பசியால் ஒசியா
வரைசீர் அயரா வருநாள் கழியா
உரியார் இகழா உணர்வோ(டு) உயிர்போய்
எரிவாய் நிரையத் தினும்மூழ் குவரே.

**குறிப்புரை** : தும்பிமுதல்= விநாயகனாகிய அண்ணன். துணர்= பூங்கொத்து. வியல் மேதினி= அகன்ற உலகில். உறுநோய் பரிவு= மிக்க நோய்த்துன்பம். ஒசியா= சோர்ந்து. சீர் வரை வருநாள்= அளவுடன் எழுதப்பட்ட எதிர்வருவாழ்நாளில். கழியா= வாழ்ந்து கழித்து. உரியார்= தமக்கு உரியவர். இகழா= இகழ. உணர்வொடு உயிர்போய்= நல்லுணர்வும் உயிரும் போய். எரிவாய் நரகம்= தீவடிவான நரகம்.

**பொழிப்புரை** : எத்தகையவரும் இருதிருவடிகளையும் வணங்கும் எம்தலைவனும், விநாயகருக்கு இளையவனும், அச்சம்தர ஒளிரும் கூரிய வேலுடன் கடப்பமலர்மாலையுடைவனும் ஆகிய செந்தில் குமரனை வணங்காதவர்கள்; அகன்றகடல் சூழவுள்ள அகன்றவுலகில் தனக்குஉற்ற நோய்த்துன்பத்தாலும் பசியாலும் சோர்ந்து, தனக்கு அளவுடன் எழுதப்பட்ட எதிர்வருவாழ்நாளில் வாழ்ந்து, தனக்கு நெருக்கமாக உரியவரும் இகழ, நல்லுணர்வொடு உயிரும்போய், தீப்பற்றிஎரியும் நரகில் மூழ்கிக்கிடப்பர். **( 42 )**

**கலித்துறை.**

மூழ்கா நிலைப்புது நீர்வேட்டு மீனம்முன் நீந்துபழந்

தாழ்கா னயாறு துறந்(து)இறந் தாங்குநின் தனையன்றி
வீழ்கா தலில்தெய்வம் வே(று)எண்ணி யான்மெலி யாதுசெந்தில்
யாழ்கா முறுமொழி வள்ளிபங் காஉள்இ ரங்குவையே.

**குறிப்புரை** : மூழ்கா= மூழ்கும். நிலை= ஆழம். புது நீர்= புது வெள்ளப்பெருக்கு. வேட்டு= பருக விரும்பி. மீனம்= மீன்கள். முன்= கண்ணெதிரே தாழ் பழங்கானயாறு= விரும்பத்தக்க பழைமையான காட்டாறு. துறந்து= கைவிட்டு. இறந்தாங்கு= புதுவெள்ளப்பெருக்கால் உயிர்விட்டாற்போல. காதலில் வீழ்= ஆசையில் விழுந்து. யாழ் காமுறு= யாழும் விரும்பும். உள் = மனம்.

**பொழிப்புரை** : யாழும்விரும்பும் மொழிபேசும் வள்ளியின் கணவனாய், செந்திலில் எழுந்தருளியுள்ள முருகா ! கண்ணெதிரே மீன்கள் நீந்தித்திரியும் விரும்பத்தக்க பழைமையான காட்டாற்றினைக் கைவிட்டு, தான் மூழ்கும் மிக்க ஆழமுடைய புத்தம்புது வெள்ளப்பெருக்கை அருந்த விரும்பிச்செல்கிறவன் அதில்சிக்கி இறந்தாற்போல, நான் பிறர்காட்டும் விரும்பத்தக்க ஆசையில் விழுந்து உன்னை நினையாமல் வேறுஒரு தெய்வத்தை எண்ணி வருந்ததிருக்க நீ மனம் இரங்குவாயாக.

இச்செய்யுள் உவமையணி. ( 43 )

**இரங்கல் - கலித்துறை.**

இரங்கி மெய்கரிந்து இருஞ்சிறை அடைந்(து)இட ரிடை மூழ்கி
வருங்கண் ணீரொடு நாணொடு மருகிய வரிவண்டீர்
கருங்கண் வார்முலைக் கெளரிசேய் செந்திலில் கார்காலம்
ஒருங்கு நும்மையும் ஒழிந்தன ரோஎமை ஒழிந்தாரே.

**குறிப்புரை** : இரங்கி= வருந்தி. (ஒலித்து). மெய்கரிந்து= உடம்பு கருமையுற்று. இருஞ்சிறை அடைந்து= மிகப்பெரிய சிறையில் அடைபட்டு ( மிக நீண்ட சிறகு பெற்று ). இடரிடை= துன்பத்தில். ( மலர் இதழ்களிடை. வரும்= வெளிப்படும். கண்ணீரொடு= கண்நீருடன், ( கள் நீரொடு= தேனுடன் ) நாணொடு= நாணமுடன் ( மதிப்புடன் ) மருகிய= மனம்சுழல்கிற.( சுழன்று பறக்கும் ). வரிவண்டீர்= கோடுகளுடைய வண்டே. கருங்கண்= கொடுமை. கெளரிசேய்= பார்வதிதேவியின் மகன் - முருகன். ஒழிந்தனரோ= நீங்கினாரோ.

**பொழிப்புரை** : வருந்தி, உடல் கருமையுற்று, மிகப்பெரிய துன்பச்சிறைப்பட்டு, துன்பத்தில் மூழ்கி, வெளிப்படும் கண்ணீருடன் மனம் சுழலவரும் கோடுகளுடைய வண்டே ! செந்திலில் இருப்பவனும் மைதீட்டிய கண்களும் கச்சு அணிந்த முலைகளுமுடைய பார்வதிதேவியின் மகன் என்னை நீங்கியது போல் உன்னையும் நீங்கினாரோ ! ( வண்டின் இயல்பைக் கூறும் சிலேடைப்பகுதி " இரங்கி ........ மருகிய வண்டீர் " என்பது. இதில் வண்டின் இயல்புகளாக " ஒலித்து, கருமையான உடல்பெற்று, நீண்ட சிறகுபெற்று, மலரிதழ்களிடையே மூழ்கி, அங்கு வெளிப்படும் தேனுடனும் மதிப்புடனும் சுழன்று பறக்கும் வண்டே " என்பதும் சிலேடையாக அதில் அமைந்துள்ள நயம் காணலாம்.

**சிந்தியல் வெண்பா.**

ஒழிந்தன துன்பம் உவந்தன உள்ளம்
இழிந்தன நம்வினை எல்லாம் - செழும்புனல்
சேந்தன் திருச்செந்தில் சேர்ந்து.

**குறிப்புரை** : இழிந்தன= நீங்கின. சேந்தன்= முருகன்.

**பொழிப்புரை** : நீர்வளம் மிக்க செந்தில் முருகப்பிரானைச் சென்று வணங்கியதால் நம் துன்பங்கள் ஒழிந்தன; உள்ளத்து நினைவுகள் மகிழ்வுதந்தன: பிறப்புதரும் இருவினைகளும் நீங்கின. நமக்கு வீடுபேறு உறுதி. ( 45 )

**இரங்கல் - ஆசிரியவிருத்தம்.**

சேர்ந்த போது குளிர்ந்தும் அன்பினர் தீர்ந்த போது கனன்றும்வான்
ஊர்ந்து கந்தன் உகந்த செந்தில் ஒதுங்கு வெண்பணி லங்கள்போல்
ஈர்ந்து பொங்(கு)இருள் நுங்கி எங்கணும் எங்கள் அங்கம் நடுங்குமா(று)
ஆர்ந்த வெம்பனி சிந்தி முந்துறஇ வந்(து)எழும் இந்துவே.

**குறிப்புரை** : தீர்ந்தபோது= பிரிந்தபொழுது. எங்கள் அங்கம் நடுங்குமாறு ஈர்ந்து. அங்கம்= உடல். ஈர்ந்து= பிளந்து. நுங்கி= உண்டு. இவந்து= இங்குவந்து. இந்து= முழுநிலவு.

**பொழிப்புரை** : முருகப்பெருமான் விரும்பி எழுந்தருளியுள்ள செந்தில்கரையில் ஒதுங்கும் வெண்மையான சங்குகள்போல், முழுநிலவு மிக்கஇருளைப் பிளந்து உண்டு; குளிர்ச்சியைத்தந்து; என்அன்பரைக் கூடிஇருக்கும் காலத்தில் எனக்குக் குளிர்ந்தும், அவரைப் பிரிந்தகாலத்தில் என்உடல் நடுங்குமாறு என்னைச் சுட்டும் என்கண்முன்னே வந்துஎழுந்தது. ( 46 )

**இதுவும் அது.**

இந்துவும் இரவியும் நின்றென உலவிய இம்பரின் எழுவகையா
வந்(து)உறு பிறவியின் நொந்(து)உழல் உடல்தொறும் மங்குதல் ஒழிவேனோ
செந்திலும் என(து)இரு கண்களும் அடியவர் சிந்தையும் அருமறைநூல்
அந்தமும் மகிழ்வொடு சந்ததம் உலவிய அம்பிகை திருமகனே.

**குறிப்புரை** : நின்றென= நிலைத்து இருப்பதுபோல். இம்பரின்= இவ்வுலகில். மங்குதல்=கழிதல்.

**பொழிப்புரை** : திருச்செந்தூரிலும், என்இரு கண்களிலும், அடியார் மனத்திலும் வேதத்து உச்சியான உபநிடதத்திலும் மகிழ்வுடன் எப்போதும் உலவும் பார்வதிதேவியின் திருமகனாகிய முருகனே ! நிலவும் ஞாயிறும் இவ்வுலகில் நிலைத்து இருப்பதுபோல், நான் தாவரம் முதலான எழ்வகைப் பிறவியில் பிறந்து உடல்நொந்து கழியும் வாழ்வை அடைவேனோ ? தடுத்து என்னை ஆட்கொண்டருள்க. ( 43 )

**கலித்துறை.**

மகவான் அரசும் அழிவற்ற யாக்கையும் மன்பதையும்
செகவாழ்வும் மற்றவை யாவும்பொய் யேதமிழ்ச் செந்தில்புகும்
தகவா ரிசமலர்த் தம்கைகள் கூப்பிநின்(று) ஆறுதிரு
முகவா னவனைப் பணிவதொன் றேமெய் முயல்பவர்க்கே.

**குறிப்புரை** : மகவான்= இந்திரன். மன்பதை= மக்கள்கூட்டம். செகவாழ்வு= உலகவாழ்வு. பொய்= அழிவன. தக= தகுதிவாய்ந்த. வாரிசமலர்= தாமரைமலர். ஆறுதிருமுகவான்= தெய்வமான ஆறுமுகப் பெருமான். மெய்= அழிவற்றதாகும்.

**பொழிப்புரை** : தேவேந்திரனாய்த் தேவருலகை ஆள்வதும், காயசித்திபெறுவதும், மக்கள் கூட்டமும், உலகவாழ்வும் பிறவனைத்தும் நிலையற்றன. இனிய செந்தில்மாநகரடையும் தகுதியுடன் போய், தெய்வமான ஆறுமுகப்பெருமான் எதிரே தாமரைமலர்போன்ற தம்கைகூப்பிச் சென்று, அவனை வணங்குவதுமட்டும்தான் அழிவற்றதாகும். ( 48 )

**கலித்தாழிசை.**

முயல்பவர் முயற்சியின் முன்னம் யாவையும்
நயன்உணர் செந்திலான் நல்குமே
நயன்உணர் செந்திலான் நல்கா னாயின்
அயல்ஒரு வானவர்கள் ஆக்குதற்கு வல்லவரும் அல்லரன்றே.

**குறிப்புரை** : முன்னம்= நினைவு. நயன்= நன்மை. அயல் ஒருவானவர்= வேறுஒரு தேவர்.

**பொழிப்புரை** : பத்தி நினைவுடன் முயல்கிறவர் முயற்சிகளனைத்தையும் அவர்க்கு நன்மையை உணர்ந்த செந்தில் முருகன் அருள்வான். நன்மையை உணர்ந்த அம்முருகன் அருளும் அதனை, வேறுஒரு தேவராலும் அருளவியலாது. ( 49 )

**குறட்டாழிசை.**

அன்(று)அல என்றும் அஞுர்எய் துவர்வேள்
மன்றல்அம் செந்தூர் வாழ்த்தா தாரே.

**குறிப்புரை** : அன்று அல= ஒருநாள்மட்டுமன்று. அஞர்= துன்பம். வேள்மன்றல்= முருகனின் அருள்மணம்.

**பொழிப்புரை** : அழகிய செந்தூரில் எழுந்தருளியுள்ள முருகனின் அருள்மணத்தை வாழ்த்தாதவர், ஒருநாள் மட்டுமன்றி என்றும் துன்புறுவர். **( 50 )**

**இரங்கல் - அடிமறிமண்டிலஆசிரியப்பா.**

தாரார் கொல்லொ தம்குளிர் தாரே
வாரா ராயின் மானனை யீரே
பாரா ராலோ பனிபடு நாளே
சீரார் செவ்வேள் செந்தூ ரவரே.

**குறிப்புரை** : குளிர்தார்= குளிர்ச்சி தரும் தோள்மாலை. மானனையீரே= மான்போன்றவவர்களே. பாரார்= எண்ணிப்பாராதவர். பனிபடு நாள்= பனிக்காலம்.

**பொழிப்புரை** : மான் போன்றவர்களே ! சிறப்புவாய்ந்த முருகனாகிய திருச்செந்தூரினர், என்பால் வராவிட்டாலும் குளிர்ச்சிதரும் தமது தோள்மாலையைத் தரமாட்டாரோ ! பனிக்காலத்தில் என்நிலையை எண்ணியும் பார்க்கமாட்டாரோ ! **( 51 )**

**பாங்கி கூற்று - வஞ்சிவிருத்தம்.**

அவரும் அங்குளர் அன்பினால்
இவரும் நெஞ்சம் இரங்கினார்
சிவன்ம கன்பயில் செந்தில்வாய்
எவரும் என்செய்வர் இன்பமே.

**குறிப்புரை** : இவரும்= எழுந்துவரும். எவரும் என்செய்வர்= யாரும் தடுக்க முடியாது.

**பொழிப்புரை** : சிவனுக்கு மகனாகிய அவரும் - செந்தில்முருகனும் அங்குதான் அன்புடன் எழுந்துவரும் உள்ளத்துடன் உள்ளார். இனி அவரை யார் தடுக்கமுடியும். தடுக்கமுடியாது. நமக்கு இனிமேல் இன்பமே உண்டாகும். **( 52 )**

**ஆசிரிய வண்ணவிருத்தம்.**

இன்பமும் துன்பமும் சங்கடம் கொண்(டு) அயர்ந்து
அங்கும்இங் கும்சுழன் றிடுமாயத்
துன்பவெம் கும்பிஅங் கம்தவிர்ந்(து) உன்பெரும்
தொண்டன்என்(று) உய்ந்(து)உளம் கழிவேனோ
புன்குருந்(து) உந்திநன் சந்தனம் சிந்திமுன்
பொங்கிவெண் சங்(கு)எறிந்(து) அலைவீசித்
தண்பொருந் தம்பசும் பொன்சொரிந்(து) எங்கணும்
தந்ததென் செந்தில்எம் பெருமானே.

**குறிப்புரை** : அயர்ந்து= அனுபவித்து. அங்கும் இங்கும்= அவ்வுலகத்தும் இவ்வுலகத்தும். சுழன்றிடும்= போய் வந்து. மாயத்துன்பம்= வஞ்சனையான துன்பம். கும்பி வெம்அங்கம்தவிர்ந்து= வயிற்றில்(உடம்பொடு) பிறத்தலை நீத்து. உய்ந்து= ஈடேற்றம் பெற்று. கழிவேனோ= கடக்க மாட்டேனோ . புன்குருந்து= சிறு வயிரக்கற்கள். உந்தி= தள்ளிக்கொண்டுவந்து. பொருந்தம்= தாமிரவருணி.

**பொழிப்புரை** : சிறுவயிரக்கற்களைத் தள்ளிக்கொண்டுவந்து, சிறந்த சந்தனமரங்களை எறிந்து, பொங்கி, வெண்மையான சங்குகளை அலைகளுடன்வீசி வரும் தண்ணிய தாமிரவருணி யாறு எவ்விடத்தும் பொன்னைச்சொரியும் அழகிய செந்திலில் எழுந்தருளியுள்ள எம்தலைவனே ! இன்பமும் துன்பமும் ஆகியவற்றைச் சங்கடத்துடன் அனுபவித்து, வானுலகு இவ்வுலகு என்று போய்வந்து சுழலுகிற வஞ்சனையான துன்பம்தரும் பிறவிகளை நீத்து உனது தொண்டனென்று ஈடேற்றம் பெற்று வாழ்வைக் கடக்கமாட்டேனோ ! அருள்புரிக. **( 53 )**

**கார்கண்டு பாகனொடு கழறல் - இதுவுமது.**

பெருமான் மதிபொதி சடையான் உடனுறை
பிணைமான் உதவிய செந்தூரன்
கருமா மயில்என உறைவாய் சிதறிய
கணமா மழைமுகில் கண்டாலே
ஒருமான் விழிவழி புனலோ உடல்வழி
உயிரோ விடுகுவள் அந்தோயான்
வருமா(று) அறிகிலள் இனிநீ விரைவுடன்
வலவா கடவுதி வன்தேரே.

**குறிப்புரை** : பிணைமான்= பெண்மான் போன்ற உமையவள். கருமாமயில்= பெருமை பொருந்திய அழகிய மயில். என= போல. உறை வாய்= நீர்த்துளிகளை இடங்கள்தோறும். ஒருமான்= ஒப்பற்ற மான்போன்ற தலைவி. புனலோ= கண்ணீர் மட்டுமா . உடல்வழி= உடம்பில் உள்ள. உயிரோ= உயிரை. ( ஓ- அசைநிலை.) வருமாறு= வந்துகொண்டிருப்பதை. விரைவுடன் கடவுதி= விரைந்து செலுத்து.

**பொழிப்புரை** : பிறைசூடிய சடையுடைய சிவபெருமான் உடனுறையும் பெண்மான்போன்ற உமையம்மை அருளிய திருச்செந்தூர் முருகப்பெருமானின் பெருமைபொருந்திய அழகிய மயில்போல் எழுந்து, நீர்த்துளிகளை - மழையினை - இடங்கள்தோறும் சிதறிய கூட்டமான கடுமழை பொழியும் மேகத்தைக் கண்டவுடன், ஒப்பற்ற மான்போன்ற தலைவி தன்விழிகளின் வழியே கண்ணீரை மட்டுமா ? தன்உடம்பில்உள்ள உயிரையும் விடுவாள். அந்தோ ! நான் வருவதை அறியமாட்டாள். தேர்ப்பாகனே ! இனிநீ வலிய தேரினை விரைந்துசெலுத்து. ( 54 )

**சிந்தடி வஞ்சிப்பா.**

தேர்ஆதவன் வழிமறுகிய திரள்சோலை
வார்ஆர்மல ரிடைஒழுகிய மதுமாரி
நீர்ஆர்வயல் செந்தூரனை நினையாதார், யாரேனும்
எழுவகைப் பிறப்பினும் இயங்கி
அழிகுவர் கறங்கென அவலம்நனி உழந்தே.

**குறிப்புரை** : ஆதவன் தேர்= சூரியனின் தேர். மருகிய= மயங்கிய. வார் ஆர்= உயர்ந்த - சிறந்த. மதுமாரி= தேன்மழை. நீர் வயல் ஆர்= நீராக நிரம்பிய வயல். இயங்கி= பிறந்து. கறங்கென= காற்றாடிபோல. அவலம் நனி உழந்து அழிகுவர். அழிகுவர்= நொந்து இறப்பர்.

**பொழிப்புரை** : சூரியனின் தேர் தன்பாதையில் செல்லாது மயங்குமாறு திரண்டு ஓங்கிய சோலையின் சிறந்த மலர்களில் பொருந்திய தேனாகியமழைநீர் நிரம்பிய வயல்களுடைய செந்தூர் முருகனை நினையாதவர் எத்தகையராயினும், தாவரம்முதலான ஏழ்பிறப்புகளிலும் காற்றாடிபோல் மாறிமாறிப்பிறந்து, மிகத்துன்புற்று நொந்து இறப்பர். ( 55 )

**கலித்துறை .**

உழவாத மம்மரும் உன்னாத நெஞ்சும் உறாப்பசப்பும்
இழவாத நாணும்எங்(கு) உண்டுவண் டீர்இயல் சேர்குறிஞ்சிக்
கிழவான் அவனை இளையோன் எனும்தன்மை கேட்கிலராய்த்
தொழஆ தரத்தொடு செந்தில்சென் றேகண்ட தோகையர்க்கே.

**குறிப்புரை** : உழவாத= வருந்தாத, மம்மர்= துன்பம். உன்னாத= நினைக்காத. பசப்பு= பசலை. வண்டீர்= வண்டுகளே. இயல்= இயற்கை. குறிஞ்சிக்கிழவான்= குறிஞ்சிநிலத்துக்குரிய முருகன். இளையோன்= மிகவும் இளையவன். கேட்கிலராய்= அனைவரும் சொல்லியும் கேளாதவராய். ஆதரம்= அன்பு - காதல்.

**பொழிப்புரை** : வண்டுகளே ! வருந்தாத துன்பமும், நினக்காத மனமும், அடையக் கூடாத பசலையும், கெடாத நாணமும் எவ்விடத்து - யாரிடம் உண்டு ? இயற்கைவளம் பொருந்திய குறிஞ்சிநிலத்துக்கு உரியவனாகிய முருகனை அனைவரும் என்றும் மிகஇளைவன் என்று

சொல்லியும் கேளாது, அவனைக் காதலுடன் வணங்கச்சென்று செந்திலில் கண்ட மகளிர்க்கே உண்டு. ( 56 )

**வெண்பா.**

தோகை புறம்ஆக்கும் துணைத்தாள் அருவினையேன்
ஓகை அகம்ஆக்க ஒண்ணாதோ - பூகம்மலி
தேன்கடம்பாய் செந்தில் திருநகரில் வீற்றிருக்கும்
பூங்கடம்பா நீதான் புகல்.

**குறிப்புரை** : தோகை புறம்ஆக்கும்= மயிலைவிட்டிறங்கும். அகம் ஓகை ஆக்க= என்மனத்தில் மகிழ்ச்சியை உண்டாக்க. பூகம்= பாக்குமரம். மலிதேன்= மிக்கதேன். கடம்= தோட்டம். புகல்= துணை.

**பொழிப்புரை** : பாக்குமரத்தின் மிக்கதேன் தோட்டத்தில் பாயும் வளமான செந்திலில் எழுந்தருளிஇருக்கும் கடம்பமலர்மாலை அணிந்தவனே ! மயிலினை விட்டிறங்கும்உன்திருவடிகள் இரண்டும் என்மனத்தில் மகிழ்ச்சியுண்டாக்கக் கூடாதா ! நீயே எனக்குத்துணை. ( மயிலினை விட்டிறங்கும் திருவடிகளை என்மனத்தில் பதித்து மகிழ்ச்சியருள்க. ) ( 57 )

**இடைச்சியார்- கலிமுரி.**

புகலும் வாய்மொழிப் பால்விலை கூறுவார்
போல்நி லாநகை பூத்தசெவ் வாய்மலர்ந்து
அகலும் வாள்மறு(கு) எல்லாம் மறுகச்சென்(று)
ஆவின் பால்விலை ஆக்கும் இடைச்சியார்
தகலும் ஆகும் குடமுலைப் பால்விலை
தனைஅ லால்சிவன் சந்ததி செந்தில்வாய்
இகலும் வாள்நெடும் கண்ணொடு நெஞ்சையும்
இவர்விற் றால்இனி யார்விலை கொள்வாரே.

**குறிப்புரை** : புகலும்= கூறுகிற. வாய்மொழி= வாய்ச்சொல்லால். நிலாநகை= ஒளிபொருந்திய புன்னகை. மலர்ந்து= திறந்து. அகலும் வாள்மறுகு= அகலமான ஒளிபொருந்திய வீதி. மறுக= மனம்மயங்க. தகலும் ஆகும்= தக்கதே ஆகும். சந்ததி= மகன். இகலும்= வலிமையான. இனியார் விலைகொள்வார்= விரும்புகிறவர் விலைக்குப் பெறுவார் / இனிமேல் யார்தான் விலைக்குப் பெறுவார்.

**பொழிப்புரை** : சிவபிரானுக்கு மகனாகிய முருகனின் செந்திலில்; கூறுகிற வாய்மொழிச் சொல்லால் பாலுக்கு விலைகூறி விற்பவர்போல், ஒளிபொருந்திய புன்னகையுடன்கூடிய செவ்வாய் திறந்து அகலமான ஒளிபொருந்திய வீதிகளில்எல்லாம் சென்று பசுவின்பாலை விற்கும் இடைச்சியாரே ! குடம்போன்ற முலையின்பால் மட்டுமன்றி, வலிமையான ஒளிபொருந்தி உமது கண்ணையும் நெஞ்சையும் இவர்கள் விற்றால் இனிமேல் விரும்புகிற அனைவரும் விலைக்குப் பெறுவாரா ? இனிமேல் யார்தான் விலைக்குப் பெறுவார் யாரும்பெறமாட்டார். ( 58 )

**தலைவி கூற்று - ஆசிரிய விருத்தம்.**

கொள்வா ரன்றோ செவிப்புலத்(து)எம்
குலத்தார் வலித்த கொடுங்கடிப்பின்
வள்வார் முரசம் கறங்(கு)ஓதை
மணம்வேட்(டு) அயரும் மனைமுன்றில்
கள்வார் கடப்பந் தொடைச்செந்தில்
கந்தன் கணைபோல் காய்கணைபாய்
புள்வார் பொருவெங் களத்(து)ஓதை
கேட்டே அகன்ற போரேறே.

**கூட்டுமுறை** : கள்வார் கடப்பந் .......... போர் ஏறு, எம்குலத்தார் மணம் வேட்டுஅயரும் மனை முன்றில் வலித்த கொடுங்கடிப்பின் வள்வார்முரசம் கறங்குஓதை கொள்வாரன்றோ.

**குறிப்புரை** : கள்வார்= தேன் சொரியும். காய்கணைபாய்= பகைவரைச் சினந்த அம்புகள் பாய்ந்த. வெங்களத்து புள்வார் பொரு= கொடிய போர்க்களத்தில் பறவைகள் (புலால்) துண்டுகளுக்காகப் போரிடும். ஓதை= ஆரவாரஒலி. வார்= துண்டு.

**பொழிப்புரை** : தேன்சொரியும் கடப்பமாலையணிந்த செந்தில் கந்தனது அம்புபோல், பகைவரைச் சினந்த அம்புகள்பாய்ந்த கொடியபோர்க்களத்தில், பறவைகள் புலால் துண்டுகளுக்காகப் போரிடும் ஆரவார ஒலிகேட்டபிறகே ( போரில் வென்றபிறகே ) போர்க்களத்தை விட்டுநீங்கிய போர்வல்ல ஆண்சிங்கமாகிய தலைவன்; எமதுகுலத்தவர் எனக்கு மணம்செய்யும் பொருட்டு வீட்டுவாயிலில் வளமான வாரினால் இழுத்துக்கட்டப்பெற்ற முரசினை முழக்கிய பேரொலியைக் கேட்டபிறகாவது என்னை மணம்செய்து கொள்வாரல்லவா ! **( 59 )**

**ஆசிரியவிருத்தம்.**

ஏறிரும் பசலைக் கலவைமான் மதச்சே(று) எழுதிய வழிமதக் கலுழி
இரைத்(து)எறி கரடத் திரள்திணி புழைக்கை இகல்கரி மருப்(பு)உறழ் முலைப்பூண்
நா(று)இரும் கூந்தல் ஏந்திழை அவர்பால் நலம்தனக்(கு) அலந்(து)உழன்(று) அவமே
நாள்கழித்(து) அவலப் படுகுழி கிடக்கும் நான்கதி காணுமா(று) உளதோ
ஆ(று)எழுத்(து) உளம்கொண்(டு) ஐம்புலன் அடக்கி அவாஅறுத்(து) ஒருநெறி துருவி
அகம்குழைந்(து) உருகிப் பருகும்அன் பினருக்(கு) ஆனந்த ஞானவா ரிதியே
பா(று)எழுந்(து) இரைக்கும் திரைப்பசுங் குருதிப் பரிதிஅம் சுடரிலை நெடுவேல்
பண்ணவா விரைப்பூந் தண்நறா வயல்பாய் பைந்தமிழ்ச் செந்தில்வா னவனே.

**குறிப்புரை** : ஏறு இரு= மிகப்பெரிய. பசலை= பசலைநோயுடன். மான்மதக் கலவைச்சேறு= கஸ்தூரி கலந்த சந்தனச்சேறு. மதவழிக் கலுழி= மதமாகிய காட்டாறு. ஏறி இறைத்து= மிகுதியாகி ஒலித்து. கரடம்= மதநீர் ஒழுகும் அடையாளம். திரள் திணி புழைக்கை= திரண்ட வலிய துளையுடைய கை - துதிக்கை. இகல்கரி= பகைத்த யானை. உறழ்= ஒத்த. பூண்முலை= கச்சணிந்த முலை. நாறு இரும்= மணக்கும் அடர்ந்த. அலந்து= வருந்தி. உழந்துஅவமே நாள்கழித்து= துன்புற்று நாட்களை வீணேபோக்கி. அவலம்= துன்பம். கதிகாணுமாறு உண்டோ= ஈடேறும் வழிஉண்டோ. ஆறு எழுத்து= திருஆறுஎழுத்தாகிய சரவணபவ. ஒருநெறி துருவி= ஒப்பற்ற வீடுபேற்றுக்கு வழிதேடி. ஆனந்த ஞான வாரிதி= பேரின்பம்தரும் ஞானக் கடல். பாறு= பருந்து. இரைக்கும்= ஒலிக்கும். திரைப் பசுங்குருதி= அலையெறியும் புதுஇரத்தம். பரிதி= சூரியன். பண்ணவன்= கடவுள். நறா= தேன். பைந்தமிழ்= வளமான இனிய.

**பொழிப்புரை** : திரு ஆறுஎழுத்தை மனத்தில் எழுதி, ஐம்புலன் அடக்கி, அவாவினை முற்றாக அறுத்து, ஒப்பற்ற வீடுபேற்றுக்கு வழிதேடி, உள்ளம் குழைந்து உருகும் அன்பினருக்குப் பேரின்பம் தரும் ஞானக்கடலே ! பருந்துகள் வானில் எழுந்து ஒலிக்குமாறு, அலையெறியும் புதிய இரத்தம் சிந்தச்செய்யும் ஞாயிற்றின் சுடர்போல் ஒளிரும் அழகிய நீண்ட வேலேந்திய கடவுளே ! மணக்கும் மலரின் தண்ணிய தேன்பாயும் வயலுடைய வளமான இனிய செந்தில்தேவே ! வளமான காட்டாறு போல் ஒலித்துப்பாயும் மதநீர் ஒழுகும் அடையாளமுடன், திரண்ட வலிமையுடன் துளையுமுடைய துதிக்கையுடையதாய்ப், பகைத்த யானையின் கூரிய தந்தம்ஒத்ததும் பசலைபடர்ந்ததும் ஆகிய முலைகளில், கத்தூரிகலந்த சந்தனச்சாந்து பூசிக் கச்சணிந்தவர்களான, மயிர்ச்சாந்து மணக்கும் கரியகூந்தலுடைய மகளிர்தரும் இன்பத்திற்கு வருந்தி, துன்புற்று, நாட்களை வீணேகழித்துத் துன்பப்படுகுழியில் கிடக்கும் நான் ஈடேற்றம்பெறும் வகையுளதோ ? அருள்புரிக. **( 60 )**

**ஆசிரிய விருத்தம்.**

வானமும் புவியும் ஆய மாறில்ஐம் பூதம் ஓதில்
ஊனுடம்(பு) ஆதல் நாயேன் ஊழ்வினைப் பகுதியன்றோ

கூன்இளம் பிறைதோய் நெற்றிக் கொடிமணி மதில்சூழ் செந்தில்
தேனினம் தொகுதார் மல்கு செஞ்சுடர் வேலி னானே.

**குறிப்புரை** : மாறுஇல்= நிலைத்த. ஓதில்= சொல்லப்புகுந்தால். பகுதி= பங்கு. நெற்றி= உச்சி. தேன் இனம்= வண்டுகளின் பல்வகை இனங்கள்..

**பொழிப்புரை** : வளைந்த மூன்றாம் பிறையைத்தொடும் உச்சியில் கொடிகள் கட்டப்பெற்ற மதில்சூழ் செந்திலில், வண்டினங்கள் மிகுதியாக மொய்க்கும் மாலையணிந்த ஒளிபொருந்திய வேலேந்திய செந்திலானே ! சொல்லப்புகுந்தால் வானம் முதல் பூமிஈறாக நிலைத்த ஐம்பூதங்களினால் ஆன இவ்வுடம்பு கீழான என் ஊழ்வினையின் பங்கினால் வருவதல்லவா ? என் ஊழ்வினையை ஒழித்தருள்க. **( 61 )**

**கார்கண்டு பாகனொடு கழறல் - இணைக்குறள் ஆசிரியப்பா.**

வேலில் கிளர்ஒளி மின்னொடு துவன்றிச்
சூலில் கடல்என முழங்கிமா லிற்கருகிக்
காலிற் கடுவிசைத்(து) எறிந்து
மேலில் பரந்து
பாலில் பஃறுளி சிதறி
கோலில் பொழிந்து குனிசிலை வளைத்தனவால்
வாலில் சிறந்தோன் மைந்தன்
சேலில் திகழ்வயல் செந்திலில் கொண்மூ
உயங்கு தேரினும் முந்துறு மாலோ
சால்பில் கேள்விப் பாக
தகவினி என்ஆம் ஆலோ
நூலில் சிறந்த நுண்ணிடை தனக்கே.

**குறிப்புரை** : வேலில்= வேல்போல். கிளர்= மிக்க. மின்= மின்னல். துவன்றி= பொலிந்து. சூல்= மழைச் சூல். முழங்கி= இடித்து. மால்= திருமால். கால்= காற்று. எறிந்து= வென்று. மேல்= வானம். பஃறுளி= பலதுளிகள். கோல்= செங்கோல். குனிசிலை= வளைந்த வில். வளைத்தன= வானவில்லிட்டன. வால்= பெருமை. சிறந்தோன்= சிறந்த சிவபிரான். மைந்தன்= மகன் - முருகன். கொண்மூ= மேகம். உயங்கு= மனம் தளரும். உயங்கு நுண்ணிடை என்று கூட்டுக. பாக= தேரோட்டியே. தகவு என் இனிஆம்= என்தகுதி இனிமேல் என்னாகும். நுண்ணிடை= நூல்போலும் இடையுடைய தலைவி.

**பொழிப்புரை** : சால்பார்ந்த கேள்விச்செல்வமுடைய தேர்ப்பாகனே ! பெருமையில் சிறந்த சிவபிரான் மகனாகிய முருகனின் சேல்கள் விளங்கும் வயலுடைய செந்தூரில், கார்மேகமானது வேல்போல் மிக்க ஒளியுடன்கூடிய மின்னலுடன் பொலிந்து, மழைச்சூல் காரணமாகக் கடல்போல்இடியால் முழங்கி, திருமால்போல் கருநிறம்கொண்டு, காற்றினையும் மிக்க வேகத்தால் வென்று, வானமெங்கும் பரவி, பால்போல் தூய பல துளிகளைச் சிதறி, வளையாது விளங்கும் செங்கோல்போல் மழைபொழிந்து, வளைந்தவில்போல் வானவில்லிட்டன. நூல்போல் நுண்ணிடைசிறந்த தலைவியிடம் கார்காலத்துக்குமுன் வருவேன் என்று கூறிவந்த என்தகுதி, மேகத்துக்குமுன் செல்லாவிடில்என்னாகும் ? விரைந்து தேரினை ஓட்டுக. **( 62 )**

**இரங்கல் - ஆசிரிய விருத்தம்.**

தனக்கோர் உவமை இல்லாத தந்திக்(கு) இளையான் செந்திலும்என்
மனக்கோ யிலும்கொண் டவன்இணைத்தாள் வணங்கா தவரின் இணங்காராய்
எனக்(கு)ஓர் உறுதி இயம்பாமல் இதண்காள் ஏனல் காள்கிளிகாள்
புனக்கோ கிலம்காள் எங்(கு)ஒளித்துப் போனார் இருந்த மானாரே.

**குறிப்புரை** : தந்தி= தந்தமுடைய விநாயகர். இளையான்= தம்பி - முருகன். இணங்காராய்= பகைவராய். இதண்= பரண் ஏனல்= புனம்=தினைப்புனம். கோகிலம்= குயில். மானாரே= மான்களே.

**பொழிப்புரை** : பரண்களே, தினைப்புனங்களே, தினைக்கொல்லைக் கிளிகளே, தினைப்புனத்துக் குயில்களே, மான்களே; விநாயகனுக்கு இளையவனும், தனக்குஓர் உவமைஇல்லாதவனுமாய்த் திருச்செந்தூரிலும் என்மனக் கோயிலிலும் இருக்கும் முருகனை வணங்காத பகைவர்போல எனக்கு எவ்வகையான உறுதியும் கூறாமல் என்னோடிருந்ததலைவர் எங்கே மறைந்துபோனார் ! **( 63 )**

**தழை - கலித்துறை.**

மானார் விழைமான் மகள்கா தலனார் வாழ்செந்தூர்
ஊனார் வடிவேல் உரவோய் இனிவே(று) உரையுண்டோ
வானார் விழையும் தழையோ தந்தாய் அம்மாநம்
கான்ஆர் குழலாள் உயிர்தந் தனைநீ கண்டாயே.

**குறிப்புரை :** மானார்= மானொத்த மகளிர். மான்மகள்= மானுக்கு மகளான வள்ளிநாயகி. ஊன்= புலால். உரவோய்= வலிமைமிக்கவனே. வானார்= தேவர்கள். தழை= கற்பகமரத்தின் தழை. கான்ஆர்= நறுமணம் பொருந்திய.

**பொழிப்புரை :** மான்போன்ற மகளிர்விரும்பும் வள்ளிநாயகியின் கணவனாகிய முருகன் எழுந்தருளியுள்ள செந்தூரில் வாழும் வலிமைமிக்க தலைவனே ! மணக்கும் கூந்தலுடைய தலைவிக்கு நீ தந்தது, தேவர்கள் விரும்பும் கற்பமரத்துத் தழையோ ? இல்லை. நீஅவளுக்குத் தந்தது அவளுயிர். எனவே அது கற்பகத்தழையைவிட உயர்ந்ததாகும் என்பதை அறிவாயாக. **( 64 )**

**மறம் - ஆசிரியவிருத்தம்.**

கண்டாலும் மனம்பதைக்கும் கடுங்கூற்று நடுங்கிளமைக்
கடல்சூழ் செந்தில்
வண்(டு)ஆலும் துணர்க்கடம்பன் மலர்ச்சரண்கள் மறவாத
மறவ ரேயாம்
பெண்டால்இன்(று) உளம்மயங்கி உயிரைவிடத் தூதுவிடு
பெருமான் தன்பால்
தொண்டால்எங் களுக்(கு)உரைக்க வருந்தூத அவற்(கு)இயம
தூதன் நீயே.

**குறிப்புரை :** ஆலும்= முழங்கும். சரண்= திருவடி. பெருமான்= உன்தலைவன். தொண்டால்= அடிமைப்பட்டவன் என்பதால்.

**பொழிப்புரை :** கடல்சூழ்ந்த செந்திலில் எழுந்தருளியுள்ளவனாகிய முருகனது, வண்டுகள் முழங்கும் கொத்தாக உள்ள கடம்பமலர் போன்ற மென்மையான திருவடிகளை மறவாத மறவர்கள் நாம். எங்களைக் கண்டஅளவிலேயே கொடிய யமனும் நடுங்கி மனம் பதைப்பான். இன்று எம்பெண்ணை மணக்க விரும்பி மனம் மயங்கித், தன்னுயிரைவிட எம்பால் தூதுவிட்ட உன்தலைவனிடம் நீ அடிமைப்பட்ட காரணத்தால் அவனுக்குத் தூதுவந்த தூதுவனே ! அவனுக்கு நீயே யமனாவாய். ( எம்தகுதி அறியாத அவனை நாங்கள் போரிட்டுக் கொல்வோம் என்றான் ) **( 65 )**

**தலைவனை வேண்டல் - வெண்பா**

தூதுசொல வேண்டிச் சுரும்பினையும் மானினையும்
மாதுசொல விட்டாலும் மாட்டாவால் - ஓதுசெந்தில்
காங்கையா ஆறிரண்டு கைத்தலத்தாய் நின்றன்னை
வேங்கையாம் என்றே வெறுத்து.

**குறிப்புரை** : சுரும்பு= வண்டு. மாட்டா= செல்லமாட்டா. வேங்கை= பொன், புலி.

**பொழிப்புரை** : அனைவரும் புகழும் செந்திலில் எழுந்தருளியுள்ள காங்கேயனே ! பன்னிருதிருக்கையனே ! உன்னிடம் தனக்குப்பரிந்து தூது சொல்லிவருக என்று வண்டினையும் மானினையும் இவள் அனுப்பினாலும் அவை தூதுசெல்லமாட்டா. ஏனெனில் வண்டு, வேங்கை எனப்பெறும் பொன்னிடம் தான்விரும்பும் தேன் இருக்காது என்பதாலும்; மான், வேங்கை எனப்பெறும் புலிதன்னை கொன்றுவிடும் என்பதாலும் ஆகும். ( வள்ளியிடம் சென்ற முருகன், வள்ளியின் சுற்றத்தார் வரக்கண்டதும் வேங்கை மரமாக நின்றதால் முருகனை வேங்கை என்றார் ) **( 66 )**

**இரங்கல் - கலித்துறை.**

வெறுப்பார் அவரென்னை மின்அனை யார்எனில் வெம்பிழையும்
பொறுப்பார் மறந்தும் புறக்கணி யார்புணர்ந்(து) ஆவிதந்(து)உள்

நிறுப்பார் புலவியின் நீடல்செய் யார்நினை வார்வினைகள்
அறுப்பார் திருச்செந்தில் வாய்இவ ரார்வந்(து) அலைப்பவரே.

**குறிப்புரை** : வெறுப்பார்= நெருங்குவார். மின்னனையார்= மின்னல் போன்ற மகளிர். புறக்கணியார்= ஒதுக்கமாட்டார். ஆவி= உயிர். உள்நிறுப்பார்= தன்னுள்ளத்தில் கொள்வார். நீடல்= நீட்டித்தல். இவரார்= ஆசைப்பெருக்குடையவர். அலைப்பவர்= துன்புறுத்துகிறவர்.

**பொழிப்புரை** : திருச்செந்தூரினராய் என்மேல் ஆசைப்பெருக்குடன் துன்புறுத்துகின்ற அவர், என்னை நெருங்குவார், மின்னல்போன்ற மகளிர் என்றால் கொடியபிழையையும் பொறுத்துக் கொள்வார்; மறந்தும் ஒதுக்கமாட்டார்; கூடி உயிர்கொடுத்துத் தன்உள்ளத்தில் கொள்வார்; புலவிகொண்டு காலம் நீட்டித்து இரார்; தன்னை நினைப்பவரின் இருவினைகளையும் அறுப்பார்.

( இறைவன் ஒருவனே ஆண்மகன். அனைத்து உயிர்களும் அவனை அடையவேண்டிய பெண்களே என்பது சாத்திரம். ஆதலின் அனைத்து உயிர்களையும் மின்னனையார் என்றார். ) **( 67 )**

### எழுத அரியது என்று ஏந்தலை விலக்கல் - கலித்தாழிசை.

அலைவாய்வள நந்(து)ஊர்இள நிலவாய்விரி செந்தூர்
அடல்நாட்டிய கதிர்வேலவர் குடநாட்(டு)அனம் அனையாள்
முலைதாம்எழு துவையேல்அவை குழையாமுழு மதிபோல்
முகம்நேரெழு துவையேல்நகை புரியா(து)இரு புருவம்
சிலைபோலெழு துவையேல்அவை குனியாஅடி தளிர்போல்
திடமாஎழுது வையேல்அவை நடவாகிளி துவர்வாய்
இலவாய்எழு துவையேல்அது கலவாநிறை அமுதம்
எங்கேஎழு துவைநீகிழி செங்கேழ்அயி லவனே.

**குறிப்புரை** : அலைவாய்= கடல். நந்து= சங்கு. அடல்= வெற்றி. குடநாட்டு= குடகுநாட்டின். அனம்= அன்னப்பறவை. குழையா= மென்மையாய் இரா. நகை= முறுவல். சிலை= வில். குனியா= வளையமாட்டா. துவர்வாய்= சிவந்த அலகு. - சிவந்த மூக்கு. இலவு ஆய்= சிவந்த இலவமலராக. நிறை அமுதம் கலவா= மிக்க அமுதம் பொருந்திஇரா. கிழி= ஓவியம் வரைந்த துணி. அயில்= கூர்மை. ( தலைவியின் படம்வரையப்பெற்ற இத்துணிக்கொடியைத் தலைவன் மடலேறிவரும்போது ஏந்திவருவான் என்பது மரபு. )

**பொழிப்புரை** : குருதியால் சிவந்த நிறமேறிய கூரிய வேலேந்திய தலைவனே ! கடலின் வளமான சங்குகள் கரையில் இளநிலவாக ஊரும் செந்தூரில், வெற்றியை நிலைநாட்டிய ஒளிபொருந்திய வேலேந்திய முருகனுக்குரிய குடகுநாட்டு அன்னப்பறவை போன்றதலைவியின் உருவத்தை நீ ஏந்திவரவேண்டிய துணிக்கொடியில் எழுத முயன்று அவளது முலைகளை எழுதினால் அவை தலைவியின் முலைகள்போல் மென்மையாய் இரா; அவளது முழுநிலவுஒத்த முகத்தை எழுதினால் அது அவளைப்போல் புன்னகைபூக்காது; அவளது இருபுருவங்களையும் வில்போல் எழுதினால் அவை மேலும் வளையமாட்டா; தளிர்ஒத்த பாதங்களை உறுதிப்படஎழுதினால் அவைநடக்கமாட்டா; கிளியின் சிவந்த அலகினையும் இலவமலரையும் ஒத்த சிவந்த இதழ்களை எழுதினால் அவற்றில் மிக்கஅமுதம் இரா. இந்நிலையில் நீ மடல்கொடியை எங்ஙனம் எழுதுவாய் ? அவள்உரு எழுதஅரியது.

கலவாது என்ற வினைமுற்றின் ஈறு கெட்டது. அனம் - இடைக்குறை **( 68 )**

### தலைவியை ஆற்றுதல் - வெண்பா.

அயில்வேல்கண் நல்லாய் அஞர்கூர்ந்(து) அலமந்து
உயிர்வேட்கை வாட்டம் ஒழிவாய் - பயிலுமதன்
பூங்கைக்(கு) அ(டு)ம்அம்புண்டு போனால் தரச்செந்தில்
வேங்கைக் கடம்(பு)உண்டு மேல்.

**குறிப்புரை** : அயில்= கூர்மை. அஞர்கூர்ந்து= துன்பம் மிகுந்து. அலமந்து= வருந்தி. உயிர்வேட்கை= உயிரின் விருப்பபாகிய காமஇன்பம். மதன்பயிலும் கைப்பூ. அடும்= வெல்லும், செந்தில்போனால்தர. வேங்கை= முருகன். மேல்= மேலும்.

**பொழிப்புரை** : கூரிய வேல்போன்ற கண்களுடையவளே ! துன்பம் மிகுந்து வருந்தி உயிரின் விருப்பமாகிய காமஇன்பம் பற்றி வருந்தாதே. நீ செந்தில்சென்றால் அங்கு வேங்கையாகிய முருகனிடம்

மன்மதன் கையிலேந்தும் மலர்களினாற்றலை வெல்லும் அம்பும், மேலும் உன்வருத்தம் தீருமாறுதரக் கடம்பமலர் மாலையும் உண்டு. ( 69 )

**விலக்கல் - ஆசிரியத்துறை.**

மேல்வா னவர்தம் சிறைஅறுத்(து) உயர்ந்த
விளங்கிலை நெடுவேல் துளங்(கு)எழில் குமரன் வியன்செந்தில்
சூல்வாய்ப் பணிலம் கறங்கும் அலைவாய்த்
துறைவாய் இனிஎம் பிறைவாள் நுதல்இன்
துணர்த்தார் அகலம் புணர்ப்போ(டு) ஏகின்
பால்வாய்க் குழவி மறிமான் மருகும்
பகுவாய்ப் புலியின் தொகைவால் புடைப்ப பணைக்கோட்டு
நால்வாய் இரையா வேட்டைபாய் அரவம்
நவிலும் பாலைத்(து எனலால் கவலை
நளிர்நீர்ப் பொருநைத் தெளிநீர் பழன நன்னாட்(டு) அகமன்றே.

**குறிப்புரை :** மேல்= மேலான.. வியன் = பெருமை. கறங்கும்= முரலும். துணர்த்தார்= மலரிதழ்களுடைய மாலை. அகலம் புணர்ப்பொடு= மார்புறத்தழுவி. பால்வாய்க் குழவி= பால்மணம் மாறாத இளங்குட்டி. மறி மான்= குட்டியுடைய மான். மருகும்= மனம் குழம்பும். தொகைவால்= தடித்தவால். புடைப்ப= ஓங்கியடிப்ப. பணை= திரண்ட. நால்வாய்= யானை. இரையா வேட்டைபாய்= வேட்டையில் இரையாக்கிக் கொள்ளப் பாயும், அரவம்= ஒலி. நவிலும்= சீறும். பாலைத்து= பாலைநிலமுடையது. கவலை= அச்சம். நளிர்= குளிர்ச்சி.. பழனம்= நன்செய் நிலம்.

**பொழிப்புரை :** மேலானதேவர்களைச் சிறைமீட்ட சிறந்த கூர்மையொடு விளங்கும் நீண்டவேல் ஏந்தி விளங்கும் அழகிய முருகனது பெருமை பொருந்திய திருச்செந்தூரின் கருக்கொண்ட சங்குகள் முரலும் அலையின்கரையில், எமது பிறைபோன்ற நெற்றியுடையவளைத் தனது மலர்மாலை சூடிய மார்புடன் தழுவிச் சென்றால்; குளிர்ந்த நீருடைய பொருநையாற்றின் தெளிந்த நீருடைய வயல் சூழ்ந்த அந்நாட்டில், பிளந்த வாயுடன்சீறும் புலிதன் தடித்த வாலால் அடிக்கும் ஒலியால். பால்மணம் மாறாத தனது இளங்குட்டிக்காக மான், மனம்குழம்ப; திரண்ட தந்தமுடைய யானையைத் தனது இரையாக்கப் பாயும் புலியின் சீறுதலால் அச்சம்தரும் பாலைநிலம் உடையது என்பர். ( இவ்வாறுகூறுவதால் உடன்போக்கினைத் தோழி விலக்கினாள். ) ( 70 )

**வெண்பா .**

அகம்மன்றல் அம்கமலத் தாள்வினையேன் அன்பால்
புகமன் தகுமகிழ்ச்சி பூத்தான் - தகஎன்றூ
ழுந்தினக ரம்போல் ஒளிகொண்ட வேற்படையோன்
செந்தினக ரம்போல் சிறந்து.

**குறிப்புரை :** வினையேன் அகம்= கீழானஎன் உள்ளத்தில். மன்றல் அம்கமலம்= மணக்கும் அழகிய தாமரைமலர். தாள்= திருவடி. புக= பொருந்தி இருக்க. மன்தகு= நிலைத்த. மகிழ்ச்சி பூத்தான்= மகிழ்ந்தான். தக= தக்கவாறு. என்றூழ்= சூரியன். உந்தின= செலுத்தியன. கரம்போல்= கிரணங்களைப்போல். செந்தில் நகரம்போல்= திருச்செந்தூர் நகர்போல்.

**கூட்டுமுறை :** என்றூழ் உந்தின கரம்போல் செந்திநகரம்போல் சிறந்து, அன்பால் வினையேன் அகம், மன்றலம் கமலத்தாள் தக, புக மன்தகுமகிழ்ச்சி பூத்தான்

**பொழிப்புரை:** சூரியன் செலுத்தியனவாகிய செம்மையான கிரணங்கள் போல் ஒளிரும் வேல் ஏந்திய முருகன், செந்தில்நகரம்போல் சிறந்து, வினையேனான என்மேல்கொண்ட அன்பால் தனது மணக்கும் அழகிய செந்தாமரைமலர்போன்ற திருவடிகள் தக்கவாறு என்மனத்தில் புக, மகிழ்ச்சிபூத்தான்.

இச்செய்யுள் கொண்டுகூட்டுப் பொருள்கோள் உடையது. ( 71 )

**பிரியேன் என்றல் - கலித்துறை.**

சிறந்தார் பரவும் திருச்செந்தி லார்சிவன்தீ நுதற்கண்
பிறந்தார் இணையடி பேணலர் போலப் பிணிஅவிழ்தார்

புறம்தாழ் குழலி புலம்பேல் உனைஐம் பொறிகலங்கி
இறந்(து)ஆவி யான்படி னும்பிரி யேன்பிறப்(பு) ஏழினுமே.

**குறிப்புரை :** பிறந்தார்= தோன்றிய முருகப்பிரான். பிணிஅவிழ்தார்= மலர்ந்த மலர்மாலை. புறம்தாழ் குழலி= பின்புறம் தொங்கும் கூந்தலுடையவளே. ஐம்பொறி= ஐம்புலன்கள். படினும்= இறந்தாலும்.

**பொழிப்புரை :** மலர்ந்த மலர்மாலையுடன் பின்புறம் தொங்கும் நீண்டகூந்தலுடையவளே ! சிவபிரானின் தீவடிவான நெற்றிக்கண்ணில் தோன்றியவரும், சிறந்தவர்களால் வணங்கப்பெறுகிறவரும் ஆகிய முருகப்பிரானின் இருதிருவடிகளையும் வணங்காதவர் போல், ஏழ்பிறப்புகளிலும் என்ஐம்புலன்கள் கலங்கி உயிர்பிரிந்தாலும் நான் பிரியமாட்டேன் . மனம்கலங்கிப் புலம்பாதே என்றான் தலைவன். **( 72 )**

**ஆசிரிய விருத்தம்.**

ஏழ்உயர் கடாயானை மேல்வெண் குடைக்கீழ்
இணைக்கவரி எறிய இருபால்
இன்னியம் முழங்கமட அன்னம்கு ழீஅனைய
ஏழையர் மருங்கு சூழக்
காழ்அகில் நறும்குற(டு) உரிஞ்சுபூந் தேய்வைகடி
கமழ்தடவும் வலைய நிமிர்தோள்
கண்ணிக் க டம்(பு)அசைய வேல்கொண்டு நீவரக்
கண்கொண்(டு) உளம்கு ளிர்வனோ
ஆழிமுரி திரைமுகடு கிழியஎழு எழுபுரவி
அருணமிசை கொடிநெ டுந்தேர்
ஆயிரம் கதிர்இரவி பாயிரும் பகலும்இருள்
அடையமிடை சினைவி டுதடங்
கோழிலை நறும்புன்னை துன்னுநுண் தாதுபடு
குவிமுகை மருட்டு முடவுக்
குடவளை மணித்தொகுதி நிலவுகாய் செந்தில்வரு
குல(வு)அமரர் தம்பி ரானே.

**குறிப்புரை :** ஏழ் உயர்= ஏழுமுழ உயரம். கடாயானை= மதயானை. இணை=இரு. எறிய= வீச. இயம்= இசைகருவி. ஏழையர்= மகளிர். காழ்= வயிரம்பாய்ந்த. குறடு= கட்டை - மரத்துண்டு. உரிஞ்சு= தேய்த்த. தேய்வை= சந்தனம். கடி= நறுமணம். வலையம்= வாகுவளையம் - தோள் வளையம். நிமிர்= உயர்ந்த. கண்ணி= மாலை. கண்கொண்டு= பார்த்து. முரி= வளைந்த முகடு= உச்சி. எழுபுரவி= ஏழுகுதிரைகள். அருணம்= செவ்வானம். இரவி= சூரியன். பா இரும்பகல்= பரவிய பெரும்பகல். மிடை= செறிந்த. சினைவிடு= கிளைகளில் தோன்றிய. தடங் கோழ் இலை= அகன்ற வளமான இலை. துன்னு நுண்தாது= பொருந்திய நுண்ணிய மகரந்தம். முகை மருட்டு= மொட்டோ என்று மயங்கச்செய்யும். குடவளை மணி= பருத்த சங்,கின் முத்து. தொகுதி= கூட்டம். நிலவுகாய்= நிலாப்போல் ஒளிரும். தம்பிரான்= தலைவன்.

**பொழிப்புரை :** கடலின் வளைந்த அலையின் உச்சியைக் கிழித்துக்கொண்டு எழும்கொடிகட்டிய பெரியதேரில் செவ்வானில்வரும் ஆயிரம் கிரணங்களுடைய சூரியனால் உண்டாகும் பரவிய பகலும் இருளாகுமாறு ,செறிந்தபுன்னைமரக் கிளைகளில் தோன்றிய, அகன்ற வளமான இலைகளோடு, மணம்செறிந்த நுண்ணிய மகரந்தம் கூடிய குவிந்தமொட்டுகள் போல் வளைந்த பருத்த சங்குகள் ஈன்ற முத்துகளின் கூட்டம், நிலவுபோல் ஒளிவீசும் செந்திலில் எழுந்தருளியுள்ள தேவர் தலைவனே ! ஏழுமுழம் உயரமான மதயானையின்மேல் வெண்கொற்றக் குடைக்கீழ் உன்னிருபுறமும் இருவெண்சாமரைகள் வீச, இனிய இசைகருவிகள் முழங்க, இளைய அன்னங்கள் குழுமியதுபோல் மகளிர் பக்கங்களில் சூழ, வயிரம்பாய்ந்த அகில்மரத்துண்டுடன் அரைத்த சந்தனக்குழம்பு நறுமணம் கமழப்பூசியனவும், தோள்வளை அணிந்தனவுமாகிய உன்உயர்ந்த தோள்களில் கடம்பமாலை அசைய வேலேந்தி நீ வரக்கண்டு நான் மனம் குளிர்வேன். **( 73 )**

**ஆசிரியத்தாழிசை.**

தம்பிரான் செந்திலில் சரவணத்(து) உதித்தோன்
அம்பொனார் கழலிணை அன்புறப் பணிந்தோர்

உம்பராய் மன்னுவர் உயர்நிலை அடைந்தே.

**குறிப்புரை** : அம்பொனார்= அழகிய பொன்போன்ற. உம்பர்= தேவர். மன்னுவர்= பெருமைபெறுவர்.

**பொழிப்புரை** : சரவணப்பொய்கையில் தோன்றிய தலைவனது அழகியபொன்னார் திருவடிகளை அன்புடன் வணங்கியவர்கள், உயர்நிலைபெற்றுத் தேவராகிப் பெருமையடைவர். ( 74 )

**மாலை இரத்தல் - கலித்துறை.**

அடைக்கலம் தான்இவள் ஆனாலும் மார்பத்(து) அணிகடம்பந்
தொடைக்(கு)அலந்(து) ஆர்உயிர் சோர்தல்நன் றோதொல் அவுணர்வெம்போ
ரிடக்கலந்து ஆவிப் பலிஊன் உடனுண்(டு) எழும்கதிர்வேல்
படைகலம் தாங்கிய கையாய்தென் செந்தில் பதிகந்தனே.

**குறிப்புரை** : தொடை= மாலை. அலந்து= துன்புற்று. நன்றோ= நன்றன்று. ஆவிப் பலி= உயிர் உணவு.

**பொழிப்புரை** : அசுரருடன் போரிட்டு அவர்களது உயிரையும் ஊனையும் ஒருசேரஉணவாக உண்டு வந்த ஒளிரும்வேல் ஆகிய ஆயுதம்தங்கிய கையுடையவனே ! செந்தில்பதியின் கந்தனே ! இவள் உன் அடைக்கலப்பொருள் ஆவாள். எனினும் உனது திருமார்பில் அணிந்துள்ள கடம்பமாலை பெறவேண்டி இவள் உயிர்துன்புறுதல் நன்றன்று. கடம்பமாலை அருள்புரி. ( 75 )

**இரங்கல் - வெண்பா.**

கந்தமல ரால்அக் கமழ்கூந்தல் ஏந்திழைமார்
தம்தம் அலர்ஆலத் தளருமோ - வந்தவினை
போக்கும்அரன் சேய்ஒளிக்கும் பூம்புனல்செந் தூர்அமர்ந்த
கோக்குமரன் பூந்தாள் குறித்து.

**குறிப்புரை** : கந்தமலரால்= மணக்கும் மலர்காரணமாக. கமழ்கூந்தல் ஏந்திழைமார்= மேலும்மணக்கும் கூந்தலுடைய மகளிர். தம்தம்= தங்கள் தங்களின். அலர் ஆல= பழிச்சொல் ஒலிக்க - கூற. அ தளருமோ= அழகு குறையுமோ. பூம்புனல்= மென்மையான நீர். ஒளிக்கும் கோக்குமரன்= ஒளிரும் தலைமை சான்ற முருகன். தாள் பூ= காம்புடன் கட்டப்பெற்ற மலர்மாலை. ( பூ - ஆகுபெயர் )

**பொழிப்புரை** உயிர்களுக்குவந்த இருவினைகளையும் போக்கும் சிவபிரான் மகனும், மென்மையான நீர்வளம்வாய்ந்த செந்தூரில் எழுந்தருளியுள்ளவனுமாகிய தலைமை சான்ற முருகப்பெருமானின் காம்புகளுடன் கட்டப்பெற்ற மலர்மாலையை நினைப்பதால், மணக்கும்மலர் காரணமாக மேலும் கமழும் கூந்தலுடைய இவளைப்பற்றிப் பிறர் தத்தமக்குள் பழிமொழி கூறுவதால் இவளின் அழகு குறையுமோ ? ( 76 )

**இதுவுமது - ஆசிரியத்துறை.**

குறுமுனிவர்க்(கு) அறம்உரைத்த குமரன்மா செந்திலின்எம் கொலைவில் வேடர்
சிறுமியைம ணம்புணர்ந்து தீர்ந்திடினும் அன்(பு)அகத்தில் தீராரன்றே
சிறுமியைம ணம்புணர்ந்(து) அன்பில்தீர்ந் தாராயின்
கறிவளர் வரைநாடற்(கு) என்னாம் என்னாம் உணர்ந்த கல்விஆறே.

**குறிப்புரை** : அறம்= தமிழ் கூறும் அறம் பொருள் இன்பம். தீர்ந்திடினும்= பிரிந்தாலும். அகத்தில் அன்பு தீரார்= மனத்து அன்பில் குறையார். தீர்ந்தாராயின்= குறைந்தால். கறி= மிளகுக்கொடி. வரை= மலை கல்விஆறு= கற்ற கல்விப்பயன். என்னாம் என்னாம்= என்னாகும் என்னாகும் - பயனில்லை.

**பொழிப்புரை** : அகத்தியருக்குத் தமிழ் அறங்களாகிய அறம் பொருள் இன்பம் உரைத்த முருகனது செந்திலில் வாழும் மிளகுக்கொடி வளரும் மலைநாட்டவர், கொலைவில்லேந்திய வேடர்களின் சிறுமியை மணந்துபின் கல்வியின் பொருட்டுப் பிரிந்தாலும் தமதுமனத்து அன்பில் குறையார். சிறுமியை மணந்து பின்அன்பில் குறைவாராயின் அவர்கற்ற கல்வியின் பயன்என்னாகும் ? ( கல்விப் பயனால் அன்பில் குறையார் ) ( 77 )

**வெண்பா.**

ஆறுமுகம் ஏன்கண்கள் ஆறிரண்டும் ஏன்அடியேற்(கு)

ஏறுவினை ஒழிப்பது எல்லாமோ - நீறணிவான்
கன்றே திருச்செந்தில் கற்பகமே நின்அருட்கண்
ஒன்றே அமையாதோ ஓது.

**குறிப்புரை :** ஏறுவினை= மேன்மேல் மிகும் இருவினைகள். கன்று= மகன். அமையாதோ= போதாதோ. ஓது= சொல்.

**பொழிப்புரை :** திருநீறுதரித்த சிவபிரான் மகனே ! திருச்செந்திலில் எழுந்தருளி வேண்டுவார் வேண்டுவரம் அருளும் கற்பகமே ! என் மிக்கவினைககளை அறுத்தெறிய உன்ஆறுமுகங்களோ பன்னிரு கைகளோ அனைத்தும் வேண்டாம். உன்னருட்கண் ஒன்றுபோதும். நோக்கியருள். **( 78 )**

**இரங்கல் - ஆசிரியவிருத்தம்.**

ஓது வார்கொலோ உயிருடல் பொறைமறித்(து) உதவுமா(று) உயர்ந்தோர்
மோது வார்இள முகிழ்முலை வனிதையர் முடிந்(து)இறந் திடும்காலைக்
காது வார்மணிக் கனங்குழை உழைமகள் காதலர் திருச்செந்தில்
போது வார்குழ லாய்கல்வி வேட்(டு)எமைப் புல்லுவிட்(டு) அகன்றாரே.

**குறிப்புரை :** உயர்ந்தோர் உயிருடல் ........ உதவும்ஆறு ஓதுவார்கொலோ. வார்மோது= கச்சினால் கட்டப்பெற்ற. வனிதையர்= மகளிர். முடிந்து= வாழ்நாள் முடிந்து. வார்காது= வடிகாது - தொங்கு துளைக் காது. உழைமகள்= மான்மகள் - வள்ளி. போது வார்குழலாய்= மலர் சூடிய நீண்டகூந்தலுடையவளே. வேட்டு= விரும்பி. புல்லு விட்டு= தழுவாது.

**பொழிப்புரை :** வடிகாதில் அழகிய குழையணிந்தவளும், மானுக்கு மகளும் ஆகிய வள்ளி நாயகிமேல் காதல்கொண்டவரின் திருச்செந்தூரரில் வாழும் மலர்சூடிய நீண்ட கூந்தலுடையவளே ! எம்மைத் தழுவாது சென்ற தலைவர், கச்சணிந்த இளமுலைமகளிர் தம்வாழ்நாள் முடிந்து இறக்கும்போது, அவர்களுயிரையும் அதனைச் சுமந்திருக்கும் உடலையும் மீண்டும் தரும்கல்வியைக் கற்றுவந்து தருவாரோ. ( பிரிந்தால் நான் இறப்பேன். என்னை மீண்டும் எழுப்பித்தரும் கல்வியுடன் வருவாரா ? அக்கல்வியால் அதனைச் செய்ய இயலாது என்பது குறிப்பு.) **( 79 )**

**இதுவும் அது - கலிவிருத்தம்.**

அகலுறார் கனவெலாம் நனவெ லாம்தொடப்
புகலுறார் உளம்குடி புகுந்த காதலார்
இகல்உறா வேள்செந்தில் இணங்க லாரின்யான்
உகல்உறா(து) ஆவிநின்(று) ஊச லாடவே.

**குறிப்புரை :** அகலுறார்= நீங்கமமாட்டார். தொட= பொருந்த. புகலுறார்= பேசமாட்டார். இகல்= பகைமை. இணங்கலாரின்= பகைவரைப் போல. ஆவிஉகல் உறாது= உயிர்விடாது.

**பொழிப்புரை :** என்னுள்ளத்தில் குடியேறிய என்காதலர், யாரையும் பகைத்துக் கொள்ளாத செந்தில் முருகனைப் பகைத்தவர் போல் நான் என்னுயிரை விடாதபடி என்உயிர் போகுமா இருக்குமா என்று கூறவியலாத நிலையிலும் என்கனவிலும் நனவிலும் பொருந்தி இருப்பாரேதவிர நீங்கமாட்டார்; என்னுடன் பேசவும்மாட்டார். **( 80 )**

**சுனையாடல் கூறித் தோழி நகுதல் - கலிவிருத்தம்.**

ஆடு பூஞ்சுனை சாந்(து)அணிந்து ஆய்மலர்
சூடி வாய்விளர்ப் பும்தரின் தோகையாய்
சேடன் வேற்படைச் சேவகன் செந்திலின்
நாடி யானும்சென்(று) ஆடுவன் ஆனமே.

**குறிப்புரை :** ஆடு= நீராடிய. பூஞ்சுனை= அழகிய சுனைநீர். சாந்து= சந்தனம். வாய் விளர்ப்பு= வாய் இதழ்கள் வெளுப்பு. சேடன்= அழகன்.சேவகன்= வீரன். ஆனம்= நீர்நிலை.

**பொழிப்புரை :** மயில்போன்றவளே ! அழகனும் வீரனும் ஆகிய முருகனது செந்திலில் , நீ நீராடிய அழகிய சுனைநீர், சந்தனம் பூசி, சிறந்த மலர்களைச் சூட்டி, வாய் இதழ்களில் வெளுப்பும் தருமானால், நானும் சென்று அதில் நீராடுவேன். ( தலைவி, புணர்ச்சியால் வந்த வேறுபாடுகளைச் சுனைநீராடியதால் வந்ததாகக் கூறக் கேட்டுத் தோழி நகையாடிக் கூறியது இது. ) **( 81 )**

**தலைவன் கூற்று ; இரங்கல் - இதுவும் அது.**

நானிலமும் எண்திசையும் நன்(கு) இசையும் நாளார்
தேன்நகு கடம்பர்உயர் செந்தில்நகர் போல்வார்
மான்நகு கருங்கண்இணை வஞ்சவிடம் ஆனால்
யானும்உயி ரும்புவியும் என்கொல்உய்யும் ஆறே.

**குறிப்புரை :** இசையும்= போற்றும். நாள்= இளமை. தேன்நகு= வண்டுகள் மொய்க்கும். மான்நகு=மானினை. இகழ்ந்த. உய்யும் ஆறு என்= வாழும்வகை என்ன - வாழ்வியலாது.

**பொழிப்புரை :** உலகமும் எட்டுத்திசைகளும் நன்கு போற்றும் இளமையுடன், வண்டுகள் மொய்க்கும் கடம்பமாலை அணிந்தவருமானமுருகனது செந்தில்நகர்போல் அழகுடைய தலைவியின் மானினை இகழும் கரிய இரு கண்கள் தந்த வஞ்சனயான நஞ்சானால் தாக்கப்பெற்ற நானும் என்னுயிரும் எப்படி வாழமுடியும் ? ( என்று வருந்தினான் ) **( 82 )**

**தோழி கூற்று ; இரங்கல் - ஆசிரிய விருத்தம்.**

மாறு படும்சூ ரோடுமு னிந்தார் வான்உயர் செந்தூர்வாய்
ஊறு படும்பே ராசையின் நம்பால் ஊரர் இரங்காரே
நீறு படும்பூண் ஆரமும் ஒன்றோ நேரிழை கண்சோர்நீர்
ஆறு படுங்கால் யாவர் அறிந்தார் ஆவி படும்பாடே.

**குறிப்புரை :** மாறுபடும்= பகைத்த. முனிந்தார்= சினந்தவர். பேராசையின் ஊறுபடும்= நம்மிக்க ஆசைகாரணமாக. ஊறுபடும்= தழும்பு உண்டாகும். ஊரார்= மருதநிலத்தலைவர். நீறுபடும்= வெந்து சாம்பலாகும். பூண் ஆரமும்ஒன்றோ= மாலையாக அணிந்த அணிகலன் மட்டுமா. ஆறுபடுங்கால்= ஆறாகப் பெருகும்போது. ஆவிபடும்பாடு அறிந்தார்யாவர்= உயிர்படும் துன்பத்தை அறிந்தவர் யார் .

**பொழிப்புரை :** பகைத்த அசுரரைச் சினந்தவரது திருச்செந்தூரில், இவள் அளவற்ற ஆசையுடன் தழுவும்போது தனக்குத் தழும்புண்டாகும் என்பதால் மருதநிலத்தலைவர் நம்மேல் கருணைகாட்டார். அதனால் இவள் அணிந்த மாலைகள் நீறாகும். அதுமட்டுமா? இவள்கண்களில் கண்ணீர் ஆறாகப்பெருகும் போது இவளது உயிர்படும் துன்பம் யார் அறிவார் ? அளவற்ற துன்பப்படுவாள் என்று இரங்கினாள்.**( 83 )**

**கலித்துறை.**

பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்(து)அன்பாய்
நாடாத உள்ளமும் நான்படைத் தால்நர(கு) ஏழும்சென்று
கூடா(து) உயர்கதி கூடுவ னோகுன் றெறிந்தவைவேல்
சே(டு)ஆர் மதில்செந்தி லாயென்கொ லோநின் திருவருளே.

**குறிப்புரை :** படைத்தால்= கொண்டிருந்தால். கூடாது= அடையமல். வைவேல்= கூரிய வேல். சேடு= அழகு. என்கொலோ= எப்படிஅமையுமோ..

**பொழிப்புரை :** உன்புகழ்பாடாத நாக்கு, உன்னை வணங்காத தலை, உன்மேல் அன்புகொண்டு விரும்பாத உள்ளம் நான்கொண்டிருந்தால், அதனால் ஏழு நரகுகளையும் அடையாமல், வீடுபேறு அடைவேனா ? கிரௌஞ்ச மலைதூளாக எறிந்த வேல்ஏந்தி அழகிய செந்திலில் எழுந்தருளியுள்ளவனே ! உன்திருவருள் எப்படிஅமையுமோ ! **( 84 )**

**தலைவிகூற்று - வெண்பா.**

அருட்கடல்வாழ் செந்திநகர் ஆய்வளைக்கை நல்லாய்
பொருட்(கு)அடல்வேல் மன்னர்ஏன் போனார் - மருட்குவளைக்
கண்பொழிய முத்தம் கனக முலைபொழிய
நண்(பு)ஒழிய நாமெலியு நாள்.

**குறிப்புரை :** செந்திநகர் = செந்தில் + நகர். பொருட்கு= பொருளீட்ட வேண்டி. குவளைமருள்= குவளைமலர் ஒத்த, முத்தம்= கண்ணீர்த்துளி. கனகமுலை= பொற்சுணங்கு பூத்தமுலை. நா மெலிய= புலம்பலால் என்நாக்கு வருந்த.

**பொழிப்புரை** : கருணைக்கடலான முருகன் எழுந்தருளியுள்ள செந்தில் நகரில் வாழும் தோழியே ! என்குவளைமலர் போன்ற கண்கள் கண்ணீர்த்துளிபொழிய, அது பொற்சுணங்கு பூத்த முலைகளில் பொழிய, புலம்பலால் நாக்கு வருந்த இந்நாளில் வெற்றிவேல் ஏந்தியஎன்தலைவர் பொருள்கருதி என்னை ஏன்பிரிந்தார் ! **( 85 )**

**பாங்கி கூற்று - கலிப்பா.**

நாணளினம் தளைஅவிழ்ந்த நறுமலர்ப்பொ குட்(டு)அகட்டுக்
கோணளினந்(து) உறங்குவயல் குமரன்மா செந்திலின்வாய்
பாணளினந் தலர்அளக பாரமுகில் சோரமணிப்
பூணளினமும் தனித்(து)ஆவி புல்லாது நில்லாதே.

**குறிப்புரை** : நாணளினம் = நாள் + நளினம்= நாளும் மலரும் தாமரை. தளை அவிழ்ந்த= மலர்ந்த. அகட்டுப் பொகுட்டு= உள்ளேயுள்ள பொகுட்டில்- கொட்டையில். கோணளினந்து= கோள் + நளி + நந்து= வலிமையான குளிர்ந்த சங்கு. பாணளினந் தலரளகம்= பாண் + அளி + நந்து + அலர் + அளகம்= இசைக்கும் வண்டுகள் மிகுதியாகமொய்க்கும் மலர்சூடிய கூந்தல். பார அளகம் முகில் சோர= கனத்த கூந்தலாகிய மேகம் கட்டுத்தளர. மணிப்பூணளினமும்= மணி + பூணள் + இனமும்= அழகிய அணிகலன்கள்அணிந்தவள் இன்னமும்கூட. ( இனமும் - இன்னமும் என்பதன் இடைக்குறை ) தனித்து= தனித்திருப்பின். ஆவி புல்லாது நில்லாது= உயிர் உடலில் பொருந்தி நில்லாது - உயிர்விட்டுவிடுவாள்.

**பொழிப்புரை** : நாளும்மலரும் நறுமணம்மிக்க தாமரைமலரின் உள்ளேயுள்ள பொகுட்டில், வலிமையான குளிர்ந்த சங்குகள் துயிலும் வயல்களுடைய முருகனின் அழகிய திருச்செந்தூரில், இசைமுரலும் வண்டுகள் மிகுதியாகமொய்க்கும் கனத்த கூந்தலாகிய மேகம் தன்கட்டுத்தளர - அவிழ - அழகிய அணிகலன்கள் அணிந்த இவள் இன்னமும் (தலைவனாகிய உன்னுடன்இராது) தனித்துஇருப்பின் இவளது உயிர் உடலில் பொருந்தி நில்லாது - இவள் உயிர் உடலைவிட்டு நீங்கும். ( எனவே விரைவில் உனது இக்காதலியை மணந்துகொள் என்றாள். ) **( 86 )**

**வெண்பா.**

நில்லாத நீயும் நிலைநின்ற என்தனக்குப்
பொல்லா தனவாம் புலன்அடக்கிப் - பல்காலும்
கார்த்திகையான் செந்தில் கடிநகரைக் கண்ணாரப்
பார்த்திகையால் நெஞ்சே பணி.

**குறிப்புரை** : புலன், அடக்கிநில்லாத நீயும். நீயும் என்றது மனத்தை. நிலைநின்ற என்தனக்கு= அழிவில்லாத - என்றும் நிலைத்த - உயிராகிய எனக்கு. பொல்லாதன= தீங்குசெய்வன. கடிநகர்= காவல்மிக்க நகரம். பார்த்தி= பார்ப்பாயாக. கையால்பணி= கைகூப்பி வணங்கு.

**பொழிப்புரை** : மனமே ! புலன்களும் அவற்றை அடக்கி ஓரிடத்தில் நில்லாத நீயும் அழிவற்ற உயிராகிய எனக்குத் தீங்கு செய்வனவேயாகும். மேன்மேலும் புலன்களை அடக்கி கார்த்திகையானாகிய முருகனது காவல்மிக்க செந்திலாகியநகரைக் கண்ணாரக்காண்; கைகூப்பி அவனை வணங்கு. **( 87 )**

**கலித்துறை.**

பணிப்பகை மயிலும் சேவல் பதாகையும் பன்னி ரண்டு
மணிக்குழை களும்ஓர் ஆறு வதனமும் வாகை வேலும்
தணிப்பசுங் கடப்பந் தாரும் தண்டையந் தாளும் நாளும்
கணிப்(பு)அரும் செந்தி லாய்என் கருத்தைவிட்(டு) அகன்றி டாவே.

**குறிப்புரை** : பணி= பாம்பு. பதாகை= கொடி. தணி= தண்ணிய. கணிப்பு அரும்= அளவிடற்கரிய.

**பொழிப்புரை** : அளவிடற்கு அரிய கருணையுடைய செந்திலாண்டவனே ! பாம்புகட்குப் பகையாகிய உன்மயிலும், சேவற்கொடியும், பன்னிருஅழகிய குழையணிந்த செவிகளும், ஆறு திருமுகங்களும் வெற்றி வழங்கும் வேலும், மார்பில் அணிந்த தண்ணிய கடப்பமலர்மாலையும், தண்டையணிந்த திருவடிகளும் எனது உள்ளத்தை விட்டு நீங்கமாட்டா. **( 88 )**

**இரங்கல் - இதுவும் அது.**

அகன்றால் அகலும் புணர்ந்தால் புணரும் என்ஆவிஅம்மா
குகன்தா(து) அவிழ்பொழில் செந்திலின் வாய்க்குளிர் மாமதிபோல்
முகன்தாழ் கனங்குழை முத்(து)அணி மூரல் முகிழ்முலைமால்
மகன்தான் எழுதிய ஓவியம் போலும் மயிலினையே.

**குறிப்புரை :** அகன்றால்= நீங்கினால். ஆவி அகலும்= என்னுயிரும் உடல்விட்டு நீங்கும். புணர்ந்தால்= சேர்ந்திருந்தால். ஆவி புணரும்= என் உயிரும் உடலில் சேர்ந்திருக்கும். அம்மா - வியப்பு. தாது= தேன். முகன்= முகம். ( மகரத்திற்கு நகரம் போலி ) மூரல்= பற்கள். முகிழ்= அரும்பு. மால்மகன்= திருமாலுக்கு மகனாகிய நான்முகன்.

**பொழிப்புரை :** செந்திலாண்டவனது தேன்பொழியும் சோலையில், குளிர்ந்த அழகிய நிலவு ஒத்தமுகமும், நீண்டவள்ளைக்காதில் கனத்த காதணியும், முத்துப்போன்று அழகியபற்களும், அரும்பு போன்ற முலைகளும் கொண்டவளாய், நான்முகன் தீட்டிய ஓவியம்போன்ற மயிலாகிய தலைவியை நான் நீங்கினால் என்னுயிர் நீங்கும், அவளுடன் சேர்ந்திருந்தால் என்னுயிரும் என்னுடம்புடன் சேர்ந்திருக்கும். இது வியப்பிற்குரியது. ( 89 )

**தலைவியை வியத்தல் - ஆசிரிய விருத்தம்.**

மயில்கடவி அண்டகோள முக(டு)அதிர அம்பொன்மேரு
வரைபிதிர அங்கை நீடுகூர்
அயில்சுழல வும்பர்வாழ உலகைவலம் வந்தசோதி
அருள்குமரர் செந்தில் போலியார்
குயில்மொழிக னிந்தபாகு மடமயில்வி ளங்குசாயல்
கொடிஇடைது வண்டு வாடுநூல்
இயல்நுதல் இந்த்ரசாபம் இணைவிழிகள் இந்த்ரநீலம்
இல(வு)இதழும் இந்த்ர கோபமே.

**குறிப்புரை :** கடவி= செலுத்தி. கோள அண்டம்= உருண்டைவடிவான அண்டம். முகடு= உச்சி. பிதிர= பொடியாகிஉதிர. அங்கை= அழகிய கை. சோதிஅருள்= ஒளிவடிவான சிவபிரான் தோற்றுவித்த முருகன். போலியர்= போன்ற மாதர். இந்த்ரசாபம்= வானவில். இதழ்= உதடுகள். இலவு= இலவமலர். இந்த்ரகோபம்= ஒண்செம்மூதாய் - தம்பலப்பூச்சி.

**பொழிப்புரை :** மயில் ஊர்தியைச் செலுத்தி, உருண்டைவடிவான அண்டத்தின்உச்சி அதிரவும், அழகிய பொன்மயமான மேருமலையின் உச்சி பொடியாகிஉதிரவும் தனது அழகியகையில் கூர்மையான நீண்ட வேலினைச் சுழற்றிக்கொண்டு தேவர்கள் வாழும்பொருட்டு உலகை வலம்வந்தராகிய, ஒளிவடிவான சிவபிரான் தோற்றுவித்த முருகனது செந்தில்நகர்போன்ற தலைவியின் குயில்போன்ற சொற்கள் இளக்கமுடைய பாகு, விளங்கு சாயல் இளமயில், துவண்டுவாடு கொடிஇடை நூல், விளங்கும்நெற்றி வானவில், இருவிழிகளும் இந்திரநீலமணிகள், இலவமலர் போன்ற இதழ்கள் தம்பலப்பூச்சியின் மென்மையும் செம்மையுமுடையனவாகும். ( 90 )

**கார்கண்டு இரங்கல் - ஆசிரியவிருத்தம்.**

கோபம் எழுந்தன மேகம் முழங்கின கோடல் நிரம்பினநீள்
சாபம் வளைந்தது தோகை பரந்தன தாரவர் வந்திலரால்
நீபம் மணம்கமழ் மார்பினர் செந்திலின் நேரிழை நெஞ்சிடையே
சோபம் மலிந்தது வாவி தளர்ந்தது சோர்வன கண்துளியே.

**குறிப்புரை :** கோபம்= இந்திரகோபப் பூச்சி. கோடை= செங்காந்தள். நீள் சாபம்= நீளமான வான்வில். பரந்தன= மிகுதியாயின. நீபம் மணங்கமழ் தாரவர் மார்பினர்= கடம்பமலை மாலை மணக்கும் மார்புடைய தலைவர். நேரிழை= தலைவி. சோபம்= சோர்வு. வாவி= உயிர். ( மலிந்ததாவி என்று புணரற்பாலது உடம்படுமெய் பெற்றது ) சோர்வன= வடிவன.

**பொழிப்புரை :** இந்திரகோபப் பூச்சிகள் தோன்றின, மேகக்கூட்டங்கள் இடித்தன, செங்காந்தள் மலர்கள் மிகுதியாக மலர்ந்தன, வானவில்லிட்டது, மயில்கள் மிகுதியாயின. கார்காலத்து இவ்வறிகுறிகள்

தோன்றியபோதிலும் மார்பில் மணக்கும்கடம்பமலர் மலைஅணிந்த தலைவர் இன்னும் வராததால். தலைவி மனத்தில் சோர்வுமிக்கது, உயிர்தளர்ந்தது, கண்களில் கண்ணீர்த்துளிகள் வடிந்தன. ( 91 )

**கலித்துறை.**

துளியாது கண்புனல் சோராது மெய்துதி யாதுசொல்நாக்
களியாது நெஞ்சம் கைகுவி யா(து(ஒ)ருக் காலும்மறை
தெளியாத வானவர் சேனா பதியைத்தென் செந்திலின்வாய்
வெளியாய் எதிர்ந்து தொழார்நர(கு) ஏழினும் வீழ்பவர்க்கே.

**குறிப்புரை** : கண்துளியாது= கண்ணீர் துளிக்காது. புனல் சோராது= கண்ணீர் ஆறாகப் பெருகாது. மெய் துதியாது=புகழ்கூறி வணங்காது. சொல்நா= பேசும் நாக்கு. நெஞ்சம் களியாது. ஒருக்காலும்= எந்தஒரு காலத்தும். வெளியாய் எதிர்ந்து= வெளிப்படையாக எதிரேபோய்.

**பொழிப்புரை** : எந்தஒருகாலத்திலும் மறையின் உட்பொருளில் தெளிவுஇல்லாத வானவர்க்குச் சேனாபதியாகிய முருகனைத் திருச்செந்தூரில் வெளிப்படையாக எதிரேபோய்க் கண்டு தொழாது ஏழ்நரகில் விழுபவர்க்கு, அவனைக் கண்டதும் மகிழ்ச்சிக் கண்ணீர் அரும்பாது; கண்ணீர் ஆறாகப் பெருகாது; பேசும்நாக்கு அவன்புகழ்கூறி வணங்காது; மனம்களிப்புக்கொள்ளாது; கைகுவித்து வணங்காது. ( 92 )

**பாங்கி ஆற்றுதல் - குறள்வெண்பா.**

வீழ்வார் எழார்பொருட்கு விட்டுநமை வெற்(பு)அயிலால்
போழ்வார்செந் தூரடையார் போல்.

**குறிப்புரை** : பொருட்கு வீழ்வார்= பொருளை விரும்புகிறவர். நமைவிட்டு எழார். எழார்= புறப்படமாட்டார். வெற்பு= கிரவுஞ்சமலை.

**பொழிப்புரை** : கிரவுஞ்சமலையைத் தனது வேலினால் பிளந்தவரின் செந்தூரை அடையாதவர்போல் நம்மைப்பகைத்து நம்தலைவர் பொருளைவிரும்புகிறவராய் நம்மை விட்டுப்புறப்படமாட்டார். கவலைப்படாதே என்று பாங்கி ஆறுத்ல் கூறினாள். ( 93 )

**பிச்சியார் - ஆசிரிய விருத்தம்.**

போலிதனக்(கு) என்றும்இலாப் புண்ணியன்கண் நுதல்கடவுள்
புதல்வன் போலப்
பீலிமயில் இயல்செந்தில் உலைவேல்கைக் கொலைவேல்கண்
பிச்சி யாரே
நூலிடையைக் குறைத்துமணிப் பணைமுலையைப் பெருக்கிஎன்றும்
நோயே செய்தீர்
நீலமுகில் ஓதிகுறைத்(து) உயிர்குறைப்ப தோஉமக்கு
நீதி தானே.

**குறிப்புரை** : போலி= ஒப்புமையாவர். கண்ணுதல்கடவுள்=[ சிவபிரான். புதல்வன்= முருகன். பீலிமயில் இயல்= தோகையுடைய மயிலின் தன்மை. கைஉலைவேல்= கையில் பகைஅழிக்கும் வேல். கொலை வேல்கண்= காண்பவரைக் கொல்லும் வேல்போன்ற கண். பணை= பருத்த. நீலமுகில்= கார்மேகம் ஓதி= கூந்தல். குறைத்து.= மொட்டையடித்து. உயிர் குறைப்பது= உயிரை நோகச்செய்வது. நீதிதானே= நீதியாகுமா.

**பொழிப்புரை** : தனக்கு ஒப்புமையானவர் யாருமில்லாத புண்ணியமே வடிவமாகக் கொண்டவனாகிய சிவபிரானுக்கு மகனாகிய முருகன்போல, தோகையுடைய மயிலின் தன்மையுடன், செந்திலில் கையில் பகையழிக்கும் வேலும், காண்பவரைக் கொல்லும் வேல்போன்ற கண்ணும் கொண்ட பிச்சியாரே ! நீவிர் நுமது இடையை நூல்போல் குறைத்து, பருத்த முலைகளை மேலும் பருக்கச்செய்து பார்ப்பவர் மனத்துக்கு நோய்செய்தீர். மேலும் கார்மேகம்போன்ற கூந்தலையுடைய தலையை மொட்டையடித்துக் கொள்வது உமக்கு நீதியாகுமா !. ( 94 )

**தலைவி பாங்கிக்கு உரைத்தல் - கலிவெண்பா.**

தானக் குனிகோட்டுத் தந்தியை யும்விலக்கிக்

கானக் குடிஞைக் கலுழியினில் காத்தளித்துத்
தேன்நக்க செச்சையந்தார்ச் செந்திலார்க்(கு) அன்பரின்என்
ஊன்நெக்(கு) உருக உயிரில் கலந்தார்க்கு
நானக் கமழ்கூந்தல் நன்னுதலே வாரலைஎன்
றியான்உற்(று) உரைப்ப(து)எவ்வா(று) இன்று.

**குறிப்புரை** : தானம்= மதம். குனிகோடு= வளைந்த தந்தம். கானக் குடிஞை= முல்லை நிலக்காட்டாற்றின் வெள்ளம். காத்து அளித்த= காத்துக் கருணைகாட்டிய. தேன் நக்க= தேனுடன் மலர்ந்த. செச்சை= வெட்சிப்பூ. அன்பரின்= அன்பர்போல. நெக்கு= நெகிழ்ந்து. கலந்தார்= கலந்த தலைவன். நானம்= கத்தூரி. வாரலை= வராதே. என்று + யான்= என்றியான். உற்று= அடைந்து - போய்.

**பொழிப்புரை** : கத்தூரி மணக்கும் கூந்தலுடன் அழகிய நெற்றியுமுடைய தோழியே ! தேனுடன் மலர்ந்த வெட்சிப்பூ மாலையணிந்த செந்திலாண்டவனுக்கு அடியவர்போல் வந்து, என்னைக்கொல்ல வந்த மதம்மிக்கதும் வளைந்த தந்தமுடையதும் ஆகிய யானையை விலக்கியதோடு மட்டுமன்றி, முல்லைநிலக்காட்டாற்று வெள்ளத்திலிருந்து என்னைக்காத்தும் கருணை செய்து, என் ஊன்நெகிழ்ந்து உருக உயிரில் கலந்த தலைவனை அடைந்து " நீ இனி இங்கு வராதே " என்று கூறுவது எவ்வாறு ? என்று தலைவனுக்குத் தன்னோடிருந்த தொடர்பைக் கூறினாள் தலைவி. (95 )

**கலிவெண்பா.**

இன்(று)உலகில் நல்குரவால் ஈடுபடும் தன்மையினால்
அன்றும் அருவினையேன் ஆன்றதவம் செய்யகிலேன்
என்று பிறப்பினும்இப் பெற்றியே முற்றும்எனைக்
கன்று மனத்தால் கவல்உழந்து நில்லாது
குன்(று)எறிந்த செந்தில் குழகாநின் பூங்கழல்கால்
சென்றுதொழு மா(று)அன்பு செய்.

**குறிப்புரை** : நல்குரவு= வறுமை. ஈடுபடும்= மனமழியும். அன்றும்= முற்பிறப்பிலும். ஆன்ற = மேலான. என்று= எப்போது. இப்பெற்றியே= இதே நிலைதான் கன்றுமனம்= வாடும் மனம்.கவல்= கவலை. குழகா= பேரழகனே.

**பொழிப்புரை** : கிரவுஞ்ச மலையைத் தூளாக்கிச் செந்திலில் எழுந்தருளியுள்ள பேரழகனே ! இப்பிறப்பில் இவ்வுலகில் வறுமையால் மனம்அழியும் தன்மைகாரணமாக முற்பிறப்பிலும் மேலான தவம் செய்ய இயலாதவனானேன் என்பது விளங்குகிறது.. நான் எப்போது பிறந்தாலும் இத்தகுவறுமையும் மனம் அழிதலுமே நிகழும். நான் கவலைமுற்றும் மனத்துடன் வாழாதுஇருக்க, உனது வீரக்கழல் அணிந்த மலர்போலும் திருவடியைச் செந்தில் சென்று தொழஅருள்புரிக. ( 96 )

**தாய்கூற்று - கலித்துறை.**

செய்யவ னேஎனும் செந்தில்எந் தாய்எனும் செவ்வடிவேல்
கையவ னேஎனும் கங்கைமைந் தாஎனும் கண்துளிநீர்
பெய்யஅ நேகம் தரம்எழும் போய்விழும் பிள்ளைமதி
வெய்யவ னேஎனும் வே(று)அறி யாள்என் விளங்கிழையே

**குறிப்புரை** : செய்யவன்= சிறந்தவன். எந்தாய்= என்தந்தையே. பிள்ளைமதி=குழந்தையின் அறிவுகாரணமாக. வெய்யவனே= விரும்பத்தக்கவனே.

**பொழிப்புரை** : சிறந்த அணிகலன்அணிந்த இவள் தன்குழந்தையறிவு காரணமாக; சிறந்தவனே, செந்திலில் எழுந்தருளியுள்ள எந்தந்தையே, கூரிய வேலேந்திய சிவந்த கைகளுடையவனே, கங்கைக்கு மகனே என்பதுடன் கண்களில் கண்ணீர்சொரிய அநேகமுறை எழுவாள், எழுந்தவள் மயங்கி விழுவாள், விரும்பத்தக்கவனே என்றெல்லாம் அழைப்பாள். இவைதவிர இவள் வேறுஅறியாள். ( 97 )

**தலைவிகூற்று - ஆசிரியவிருத்தம்.**

இழைக்கும் கூடலும் என்இரு கண்களின் இமைகளும் இர(வு)எலாம்
உழைக்கும் கூடல் அமைந்துதென் செந்திலாய் ஒருகணம் கூடாவால்
மழைக்கண் அம்பிகை மலர்க்கரம் கோட்டியே வார்முலை பீர்ஓட

அழைக்க நின்றுகூத் தாடிய மணிச்சிலம்(பு) அலம்புசே வடியானே.

**குறிப்புரை** : கூடல் இழைத்தல் - தலைவனைப்பிரிந்த தலைவி, தலைவனின் வருகையறிய இழைக்கும்குறி. அஃதாவது கண்களை மூடிக்கொண்டு ஒற்றை விரலால் மணலில் சுழியிடும்போது , சுழியின் இருநுனிகளும் தம்முள்கூடின் தலைவன் வருவான் என்றும் அவைதம்முள் கூடாவிடின் வாரான் என்றும் உணர்தல். கூடற்சுழிகூடவில்லை, அதனால் கண்ணிமைகளும் கூடவில்லை - உறங்கவில்லை என்கிறாள். உழைக்கும்= வருந்தும். மழைக்கண்= கருணைக்கண். கோட்டி= வளைத்து. பீர் ஓட= பால் சுரந்து ஓடுவதால். அலம்பு= ஒலிக்கும்.

**பொழிப்புரை** : கருணைக்கண்களுடைய பார்வதிதேவி, தனது கச்சணிந்த முலைகளில் பால்சுரந்து ஓடமுற்படுவதால் அதனப்பருக, மலர்போன்ற தன்கைவிரல்களை வளைத்து வாஎன்று அழைக்கவும் வராமல் எதிரேநின்று மணிச்சிலம்பு ஒலிக்கக் கூத்தாடிய சேவடியானே ! நான் இழைக்கின்ற கூடற்குறியும் தம்முள் கூடவில்லை. இரவு முழுவதும் வருந்தும் கண்ணிமைகளும் நொடிப்பொழுது கூடக் கூடவில்லை - உறங்கவில்லை என்கிறாள்.

**கூடல்குறி இழைத்துப்பார்த்தல்:**

" மாடம் நீள்மரு கற்பெரு மான்வரின் கூடுநீ என்று கூடலிழைக்குமே " ( திருமு. 5. திருமருகல்.8 )

" தழைத்திடும் கூடலார், குழைத்துஉடன் கூடலார், பிழைத்திடும் கூடலே, இழைத்திடும் கூடலே "
( மதுரைக் கலம்பகம். 22 ) **( 98 )**

**கலிப்பா.**

அடியாரின் உளமுருகன் பறியாத என்புன்சொல்
முடியாத நக்கீரர் முருகாற்றுப் படையாமோ
தொடிஆர்பன் னிரண்டுதடந் தோளார்க்குச் திருச்செந்தில்
வடிவாய்வள் உகிர்சேவல் வலன்உயர்த்த கொடியார்க்கே.

**குறிப்புரை** : அடியாரின்= தொண்டர்கள் போல். பறியாத= கவர்ச்சி இல்லாத. முடியாத= கெடாத. தொடி= தோள்வளை. வடிவாய்= கூர்மையான அலகு. வள் உகிர்= வளமான நகம். வலன்=வலக்கையில் / வெற்றிகாரணமாக.

**பொழிப்புரை** : தோள்வளைகளைப் பன்னிருதோள்களிலும் அணிந்தவராய், திருச்செந்தூரில் எழுந்தருளிக் கூர்மையான அலகும் வளமான - வலிமையான நகமுமுடைய சேவற்கொடியை வெற்றிகாரணமாக உயர்த்தியவரும், தொண்டர்கள்போல் உள்ளவனும் ஆகிய முருகனுக்கு என்கவர்ச்சி இல்லாத அற்பச்சொல் நக்கீரரின் திருமுருகாற்றுப்படையாகுமா ! **( 99 )**

**வெண்பா.**

ஆர்க்கும் களிவண்(டு) அறையும் பொழில்திருச்செந்
தூர்க்(கு)அன் புடன்நீசென்(று) உள்ளமே - கூர்க்கும்
எழுமையினும் நீபிறப்பில் எய்தாமல் சேயைத்
தொழுமயிலும் வேலும்எனச் சொல்.

**குறிப்புரை** : ஆர்க்கும்= நிறைந்திருக்கும். அறையும்= முழங்கும். கூர்க்கும்= மேன்மேல் மிகும். சேய்= முருகப்பிரான்.

**பொழிப்புரை** : உள்ளமே ! நீ நிறைந்திருக்கும் களிப்புடைய வண்டுகள் முழங்கும் திருச்செந்தூர் சென்று ஏழ்வகைப்பிறப்புகளிலும் நீ பிறவாது வீடுபேறடையும் பொருட்டுச் செந்திலாண்டவனை வணங்கு. மயிலும் வேலும் துணை என்று சொல். **( 100 )**

திருச்சிற்றம்பலம்.